ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் அருளிச்செய்த

# கோதாஸ்துதி

---

[ஸ்ரீகாஞ்சி. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய வியாக்கியானத்தோடு கூடியது]

## வியாக்கியான அவதாரிகை

---

கவிதார்க்கிகஸிம்ஹமென்னும் விருதுபடைத்த ஸ்ரீமந் நிகமாந்ததேசிகன் அந்த விருதை ஸார்த்தக மாக்குதற்குப் பற்பல திவ்யக்ரந்தங்களை இயற்றியருளினர். அத்தகைய திவ்யக்ரந்தங்களின் பாகுபாடுகளில் ஸ்தோத்திரங்கள் என்பது ஒரு பாகுபாடு. அநேக சாஸ்த்ரக்ரந்தங்களில் பலகால் பரிச்ரமப்பட்டு மிகவருந்தித் தெரிந்து கொள்ள வேண்டிய வேதாந்த ஸம்ப்ரதாயார்த்த ஸாரங்களை நம்போன்ற அலஸர்களான அல்பமதிகளும் எளிதில் உணர்ந்து உய்யும் வண்ணம் பலபல ஸ்தோத்ரக்ரந்தங்களை அமுதிலுமாற்ற வினிதாக அவதரிப்பித்தருளினர். இவற்றை அர்த்தத்துடன் அதிகரித்துக் கண்டபாடமாக தரிக்கப்பெறில் ஸர்வஜ்ஞத்வம் ஸித்தமாகுமென்பது அதிசயோக்தியன்று.

ஸ்வாமி தாமே தசாவதார ஸ்தோத்ரத்தில் பலச்ருதி அருளிச்செய்புமிடத்து வக்த்ரே தஸ்ய ஸரஸ்வதீ பஹுமுகீ பக்தி: பரா மாநஸே சுத்தி: காபி தநௌ திசாஸு தசஸு க்யாதிச் சுபா ஜ்ரும்பதே'' என்றார்; ஒரு சிறிய ஸ்தோத்ரத்தைக் கற்க நினைக்குமளவிலேயே பஹுமுக பாண்டித்யமும் பக்தியும் புகழுமாகிய இவையெல்லாம் ஒருங்கே விளையும் என்றார். உண்மையில் ஒவ்வொரு ஸ்தோத்திரமும் இத்தனை பெருமைவாய்ந்த தென்னுமிடத்தில் ஸம்சயலேசமுமில்லை,

அந்த திவ்யஸ்தோத்ரங்களின் அரும்பெரும் பொருள்களை அனைவரும் அழகாக அறிந்து கொள்ளுமாறு அநதிஸம்க்ஷிப்த விஸ்த்ருதமான வியாக்கியானத்தை எழுத மஹான்களின் நியமனத்தினல் ப்ரவர்த்திக்கும் பாக்கியம் பெற்ற அடியேன் இப்போது, சூடிக்கொடுத்தசுடர்க்கொடி விஷயமாக ஸ்வாமி அருளிய கோதாஸ்துதியை வியாக்கியானிக்கப்புகுகின்றேன். ஸ்வாமி தக்ஷிண திவ்யதேச யாத்திரையாக எழுந்தருளுமடைவில் ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு எழுந்தருளியிருக்கையில் அங்கு ஆண்டாள் விஷயத்திலுண்டான பக்தி பரீவாஹரூபமாக அருளிச்செய்தது இந்த ஸ்துதி—என்று பெரியோர் கூறுவர். ✳

அவதாரிகை முற்றிற்று.

---

# கோதாஸ்துதி

———

{ ஸ்ரீவிஷ்ணுசித்த குலநந்தந கல்பவல்லீம் ஸ்ரீரங்ராஜ ஹரிசந்தநயோகத்ருச்யாம்,
( ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாமிவாந்யாம் கோதாமநந்ய சரண: சரணம் ப்ரபத்யே. } (1)

(அந்வயக்ரமம்) ஸ்ரீவிஷ்ணுசித்நகுல நந்தந கல்பவல்லீம், ஸ்ரீரங்கராஜ ஹரிசந்தந யோக த்ருச்யாம், ஸாக்ஷாத் க்ஷமாம், கருணயா அந்யாம் கமலாம் இவ (ஸ்திதாம்) கோதாம், அநந்யசரண: (அஹம்) சரணம் ப்ரபத்யே.

(உரை) பெரியாழ்வாருடைய திருவம்சமாகிற நந்தன வனத்தில் தோன்றிய கற்பகக் கொடிபோன்றவளும், அழகிய மணவாளனுகிற கற்பகத்தருவோட்டைச் சேர்த்தியினுல் அழகு பெற்று விளங்குபவளும், க்ஷமை தானே வடிவெடுத்து வந்தவளென்னலாம்படியுள்ளவளும், திருவருள் விஷயத்தில் பெரிய பிராட்டியாருடைய அபராவதார மென்னலாம்படியுள்ளவளுமான சூடிக்கொடுத்த நாச்சியாரைப் புகலொன்றில்லா வடியேன் சரண்புகுகின்றேனென்கை.

ஸ்ரீகுணரத்நகோசத்தில் ஸ்ரீரங்கநாச்சியாரைத் துதிக்கப்புகுந்த பட்டர் *அநுகலதநுகாண்ட* இத்யாதியான மூன்ருவது ச்லோகத்தில் ஸ்ரீமஹாலக்ஷ்மியை ஒரு கற்பகக் கொடியாக வருணித்துப் பேசின கணக்கிலே இவ்வாசிரியர் தாமும் ஆண்டாளைக் கற்பகக் கொடியாக முதலடியிலேயே பேசப்புகுந்தார். கற்பகக் கொடியானது ஸகலார்த்தங்களையும் அளிக்கவல்லது. அது போலவே ஆண்டாளும் தனது திவ்ய ஸூக்திகள் வழியாக ஸகலார்த்தங்களையும் விளங்கச் செய்பவள் என்பது விவக்ஷிதம். தேவேந்திரனுடைய உத்யான வனத்திற்கு நந்தன மென்று பெயர். அங்குத்தான் கற்பகக் கொடி படரும். இவ்வாண்டாளாகிற கற்பகக் கொடியானது *வேயர் தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் குடியாகிற நந்தன வனத்தில் தோன்றியதாம். பெரியாழ்வாருடைய திருக்குலம் ஆண்டாள் திருவவதாரத்தினுல் மிக்க பொலிவுபெற்றதென்பது கருத்து.

கொடியானது ஒரு கொள்கொம்போடே அணைந்தல்லது நில்லாது. அது போல, இக்கோதைக் கொடியும் ஸ்ரீரங்கநாதனுகிற கற்பகத்தருவையணைந்து விளங்காநிற்கும். ''எனக்கே தன்னைத் தந்த கற்பகம்'' என்று ஆழ்வார் எம்பெருமானைக் கல்பவ்ருக்ஷமாக அருளிச் செய்திருப்பது காண்க. அமர கோசத்தில் ''பஞ்சைதே தேவதரவோ மந்தார: பாரிஜாதக:, ஸந்தாந: கல்பவ்ருக்ஷச்ச பும்ஸிவா ஹரிசந்தநம்.'' என்று ஐந்து வ்ருக்ஷங்கள் தேவ வ்ருக்ஷங்களாகக் கூறப்பட்டன; அவற்றுள் ஏதேனு மொன்றைச் சொன்னுலும் ஐந்தும் சொன்னபடி யாகுமென்பது கவிமரபு. ஸ்ரீரங்கராஜ எவ ஹரிசந்தந: — கல்பவ்ருக்ஷ:, தேந ஸஹ யோகேந—நித்யஸம்யோகேந, த்ருச்யாம்—ரமணீயாமித்யர்த்த:. "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்'' என்று உறுதி கொண்டபடியே எம்பெருமானையே கணவனுகப் பெற்று மகிழ்ந்தவளென்றவாறு.

ஸாக்ஷாத் க்ஷமாம் என்றது இரட்டுற மொழிதல் போலும், (அதாவது) க்ஷமா என்ற பதம் பூமிக்கும் வாசகம், பொறுமைக் குணத்திற்கும் வாசகம். அவ்விரண்டு பொருளும் இங்கு விவக்ஷிதமேயாகும். ஆண்டாள் யோநிஜை யன்றிக்கே ஸீதா

பிராட்டி போலே நிலத்தில் தோன்றியவளாதலால் பூமிப் பிராட்டியின் அம்சாவ தாரமாகச் சொல்லப்படுபவள். அதனாலே பூமியென்ற பொருள் விவக்ஷிதம். ஸர்வம் ஸஹையான அந்த பூமியின் குணமான பொறுமை, இவளுக்கு பகவத் பத்நீத்வ ப்ரயுக்த புருஷகாரத்வைகாந்திகமாதலால் அப்பொருளும் இங்கு விவக்ஷிதம்.

கருணயா அந்யாம் கமலாமிவ ஸ்திதாம். அந்த க்ஷமாகுணத்திற்கும் ஊற்றுவாயான கருணை, ஆண்டாள் பக்கலிலே குடிகொண்டிருக்கும் படியை நோக்குங்கால், "தேவ்யா காருண்ய ரூபயா" என்னப் பட்ட பெரிய பிராட்டியார் தாமே இப்படியும் ஒரு திருவுருக்கொண்டாள் கொலோ!" என்னலாம்படி யிருக்குமென்கை. *அல்லி நாள் தாமரை மேலாரணங்கினின் துணைவியிறே! ஆக இப்படிப் பட்ட ஆண்டாளை யடி பணிகின்றேனென்றாராயிற்று.

இது முதல் இருபத்தேழு ச்லோகங்கள் வஸந்ததிலக வ்ருத்தத்தில் அமைந்தவை. "உக்தம் வஸந்ததிலகம் தபஜா ஜகௌக:" என்பது அதன் இலக்கணம். (1)

வைதேசிக: ச்ருதிகிராமபி பூயஸீநாம் வர்ணேஷு மாதி மஹிமா நஹி மாத்ருசாம் தே,
இத்தம் விதந்தமபி மாம் ஸஹஸைவ கோதே மௌநத்ருஹோ முகரயந்தி குணாஸ்த்வதீயா: (2)

(அந்) கோதே! பூயஸீநாம் ச்ருதிகிராமபி வைதேசிக: தே மஹிமா மாத்ருசாம் வர்ணேஷு நஹி மாதி; இத்தம் விதந்தம் அபி மாம் த்வதீயா: குணா: மௌநத்ருஹஸ் ஸந்த: ஸஹஸைவ முகரயந்தி.

(உரை) ஆண்டாளே! பலபல வேதவாக்குக்களுக்கும் எட்டாததான உம்முடைய வைபவமானது என் போன்றவர்களின் (அற்பங்களான) அக்ஷரங்களில் அடங்க மாட்டாது என்கிறவிதனை நான் அறிந்திருக்கச்செய்தேயும் உம்முடைய திருக்கல்யாண குணங்களானவை என்னை வாய்மூடி நிற்கவொட்டாமல் பலாத்காரமாகவே பேசுவிக்கின்றன வென்கை.

எம்பெருமானுடைய மஹிமை, எப்படி வேதங்களினாலும் எல்லைகாணமுடியாததோ, அப்படி பிராட்டியின் மஹிமையும் வேதங்களாலும் அபரிச்சேத்யம் என்பது ஸர்வஸம்மதம். ஆண்டாள் பிராட்டியின் அம்ச மென்பதும் ஸர்வஸம்மதம். ஆகவே, 'வேதங்களாலும் அறுதியிட வொண்ணாத உமது மஹிமையை அல்பஜ்ஞனான அடியேன் பேசப்புகுவது மிகவும் பேதமை' என்று அநுஸந்திக்க ப்ராப்தமாயிற்று. அங்ஙனம் அநுஸந்தித்த ஆசிரியர் 'அடியேன் இந்தஸ்துதியை விண்ணப்பம் செய்யப் புகுவது வீணான காரியம் போலிருக்கின்றதே!' என்பதைப் பூர்வார்த்தத்தினால் வெளியிட்டு, தாமே ஸமாஹிதராய் ஸ்துதியில் ப்ரவர்த்திக்கிறபடியை உத்தரார்த்தத்தினால் வெளியிடுகிறார். ஆண்டாளே! உமது திருக்குணங்களை யெல்லாம் பேசவேணுமென்கிற ஆவலோடு நான் ப்ரவர்த்திக்கின்றிலேன்; உமது திருக்குணங்கள் ஊமையையும் பேசுவிக்க வல்லவை யாதலால் ஸ்வேச்சயா ஸ்துதியில் ப்ரவர்த்திக்க நினைவில்லாத அடியேனையும் பலாத்காரமாகவே தூண்டுகின்றனவாகவே பரவசனாய் ப்ரவர்த்திக்கின்றேனென்றாராயிற்று.

ச்ருதிகிராமபி அவிஷய: என்ன வேண்டுவதற்குப் பர்யாயமாக, வைதேசிக: என்றது கம்பீரப்ரயோகமிருக்கிறபடி. வைதேசிக:—விபிந்நதேசவர்த்தீ என்றபடி. "நான்மறைகள் தேடியென்றுங் காணமாட்டாச் செல்வன்" என்றது போலே.

அந்யந்தம் பஹ்வ்ய:—பூயஸ்ய:, தாஸாம்—பூயஸீநாம். வர்ணேஷு என்பதற்கு ஸ்துதிகளில் எனப் பொருள்கூறுதலும் பொருந்தும். *வர்ணோ த்விஜாதௌ சுக்லாதௌ ஸ்துதௌ வர்ணந்து வாக்ஷர:—இத்யமர:. மௌந-த்ருஹ:- நான் வாய்திறவாதிருக்கப் பார்த்திருக்கமாட்டாதவை என்றபடி. (2)

{ த்வத்ப்ரேயஸ: ச்ரவணயோரம்ருதாயமாநாம் துல்யாம் த்வதீய மணிநூபுர சிஞ்ஜிதாநாம், கோதே! த்வமேவ ஜநநி! த்வதபிஷ்டவார்ஹாம் வாசம் ப்ரஸந்நமதுராம் மம ஸம்விதேஹி. } (3)

*(அந்)* ஹே ஜநநி கோதே! த்வத் ப்ரேயஸ: ச்ரவணயோ: அம்ருதாயமாநாம், த்வதீய மணிநூபுர சிஞ்ஜிதாநாம் துல்யாம் த்வத் அபிஷ்டவ அர்ஹாம் ப்ரஸந்நமதுராம் வாசம் த்வமேவ மம ஸம்விதேஹி.

*(உரை)* தாயே கோதாய்! உம்முடைய கொழுநனை எம்பெருமானுடைய திருச்செவிகளுக்கு அமுதம்போல் இனிதாயிருப்பதும், உமது ரத்நமயமான பாதச் சிலம்பின் அழகிய வொலிக்குத் தோள்நீண்டியாயிருப்பதும், உம்மைத்துதிப்பதற்கு ஏற்றிருப்பதும், ப்ரஸந்ந மதுரமுமான வாக்கை நீரே எனக்கு வாய்க்கும்படி அநுக்ரஹிக்கவேணுமென்கை.

இந்த ஸ்துதியானது ஆண்டாளுடைய திருவருளினாலேயே பரம மதுரமாக அமைகின்றதென்பதை இதனால் தெரிவிக்கிறார். பட்டர் ஸ்ரீ குணரத்நகோசத்தில் "ச்ரியஸ்ரீ: ஸ்ரீரங்கேசய தவச ஹ்ருத்யாம் பகவதீம் ச்ரியம் த்வத்தோப்யுச்சைர் வயமிஹ பணும: ச்ருணு தராம், த்ருசௌதே பூயஸ்தாம் ஸுகதரல தாரே ச்ரவணத: புநர்ஹர்ஷோத்கர்ஷாத் ஸ்ப்புட்து புஜயோ: கஞ்சுகசதம்." என்றச்லோகத்தினால் தெரிவித்தருளின அர்த்தத்தை இதில் முதல் பாதத்தினால் ஸ்வாமி தெரிவிக்கிறார். எம்பெருமானும் இந்த ஸ்துதியைக் கேட்டருளி மிகவும் திருவுள்ளமுவப்பனென்றவாறு.

ஆண்டாள் சிலம்பார்க்க நடக்கப் புக்கால் அந்த ஆர்ப்பு எவ்வளவு போக்யமாயிருக்குமோ அவ்வளவு போக்யமாயிருக்கும் இந்த ஸ்துதியின் சப்தஸந்நிவேசமும் என்பது இரண்டாம் பாதத்தின் உட்கருத்து.

ப்ரஸந்ந மதுரம். விவக்ஷிதமான பொருளை வெகுப்ரயாஸப்பட்டுத் தெரிந்து கொள்ளவேண்டாமல் எளிதாகவும் தெளிதாகவும் தெரிந்து கொள்ளுதற்குப் பாங்காக அமைந்திருத்தல் ப்ரஸந்நத்வமாகும், நாரிகேள பாகமாக இருக்கை யன்றியே த்ராக்ஷா பாகமாக இருக்கை மாதுர்ய மாகும். (3)

{ க்ருஷ்ணாந்வயேந ததீம் யமுநாநுபாவம் தீர்த்தைர்யதாவதவகாஹ்ய ஸரஸ்வதீம் தே, கோதே விகஸ்வர தியாம் பவதீகடாக்ஷாத் வாசஸ்ப்புரந்தி மகரந்தமுச: கவீநாம். } (4)

*(அந்)* கோதே! க்ருஷ்ணாந்வயேந யமுநாநுபாவம் ததீம் தே ஸரஸ்வதீம் தீர்த்தை: யதாவத்.அவகாஹ்ய பவதீகடாக்ஷாத் விகஸ்வரதியாம் கவீநாம் மகரந்தமுச: வாச: ஸ்ப்புரந்தி.

*(உரை)* ஆண்டாளே! ஸ்ரீகிருஷ்ண ஸம்பந்தத்தினால் 'யமுனை தானோ இது?' என்னலாம் படியுள்ள உமது ஸரஸ்வதியை "திவ்யப்ரபந்தத்தை" ஸதாசார்யமுகமாக அதிகரித்து உமது கடாக்ஷத்தினால் புத்திவிகாஸம் பெறுகின்ற கவிகளுக்கு அம்ருத வர்ஷியான வாக்குக்கள் விளைகின்றன வென்கை.

கண்ணபிரானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளைப் பரக்கப் பேசியுள்ள திருப்பாவையையும் நாச்சியார் திருமொழியையும் திருவுள்ளம்பற்றி தே ஸரஸ்வதீம் என்றார்.

ஸரஸ்வதீ என்கிற சொல், வாக்குக்கு வாசகமாயிருப்பது போலவே ஒரு நதீ விசேஷத்திற்கும் வாசகமாதலால் அந்த அர்த்தமும் இங்கு தந்த்ரேண விவக்ஷிதம். ஸரஸ்வதியாயிருக்கச் செய்தேயும் யமுனை போலவுமிரா நின்றதென்று ஒரு சமத்காரம் காட்டுகிறார் முதல் பாதத்தில். அதாவது—இவர் தாமேயுநிராஜ ஸப்ததியில் "விகாஹே யாமுநம் தீர்த்தம் ஸாது ப்ருந்தாவநே ஸ்திதம், நிரஸ்தஜிஹ்மஸம்பர்சே யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:" என்றருளிச் செய்தபடிக்கும் ஸ்ரீபாகவதாதி கதாப்ரஸித்தியின் படிக்கும் யமுனையானது க்ருஷ்ண ஸம்பந்தத்தைப் பெற்றிருப்பது. க்ருஷ்ணவர்ண ஸம்பந்தம் பெற்றிருப்பதென்பதும் சொல்தொடையில் தோன்றும்; யமுநாநீர்த்தம் கருநிறமுடையதென்பர்களன்றோ, ஆண்டாளுடைய ஸரஸ்வதிக்குண்டான க்ருஷ்ணாந்வயத்தை விவரிக்கவேணுமோ? பாசுரந்தோறும் க்ருஷ்ண குணாநுபவமேயிறே உள்ளது. ஆக இப்படிப்பட்ட ஸரஸ்வதியை (தீர்த்தை:யதாவத் அவகாஹ்ய) நதிகளில் இறங்குதற்குரிய துறைகளுக்கும் தீர்த்த மென்றுபெயர்; ஆசாரியர்களுக்கும் தீர்த்தமென்று பெயர்.

இங்கு ஆண்டாளுடைய திருவாக்கை ஸரஸ்வதீ சப்தத்தினால் கூறியுள்ள படிக்கிணங்க "தீர்த்தை: யதாவத் அவகாஹ்ய" என்கிற பதங்களை ப்ரயோகித்தது பரமரஸமயம். மஹா நதியில் துறைதவறி இறங்கினால் அபாயமே பலிக்கும். தகுந்த துறைகளில் இறங்கி அவகாஹித்தே பயன்பெற வேண்டும். அதுபோலே இவளுடைய திவ்யப்ரபந்தங்களிலும் ஸதாசார்ய முகமாக இழிந்தாலல்லது சிறந்த நற்பொருள்களைப் பெற முடியாதென்று காட்டினபடி. ஆண்டாளுடைய திவ்யஸூக்திகள் அதிகம்பீரமான அர்த்தரத்நங்கள் அமையப் பெற்றனவாதலால் அவற்றில் மேலெழ நோக்குவார் பயன் பெறார்கள்; ஆழ்ந்துநோக்குவார்க்கே அரியபெரிய பொருள்கள் கிடைக்கு மென்பதை அவகாஹ்ய என்றதனால் காட்டினர். இங்ஙனம் ஆண்டாளுடையதிவ்யஸூக்திகளில் ஆழங்காற் படுவார்க்கு அவளுடைய கடாக்ஷமே அடியாக நல்லபுத்தி கொழுந்துவிட்டோங்கிப் படருமென்றும், அன்னவர்களும் தேனிலுமினிய செஞ்சொற்கவிகளை இயற்ற வல்லமை பெறுவர்களென்றும் உத்தரார்த்தத்தால் தெரிவித்தபடி. கோதா என்னும் சொல் கோதாவரீ நதிக்கும் பெயராக நிகண்டுகளிலுள்ளது. ஆகவே இந்த ச்லோகத்தில் கோதாவரீ, கிருஷ்ணை, யமுனை, ஸரஸ்வதீ என்கிற புண்ணிய நதிகளைச் சேர்த்துக் கவிபாடிய இன்பமும் அநுபவிக்கவுரியது. ஸமாஸோக்தி யலங்காரத்தில் இதுவொரு பாகுபாடாக ஆலங்காரிகர்கள் நிர்வஹிக்கின்றனர். மேலே "ப்ராயேண தேவி! பவதீவ்யபதேசயோகாத்" என்கிற பன்னிரண்டாம் ச்லோகத்தில் "யஸ்யாம் ஸமேத்ய ஸமயேஷு சிரம் நிவாஸாத் பாகீரதீப்ரப்ருதயோபி பவந்தி புண்யா". என்று கோதாவரீநதியைப் பற்றின ஒரு புராண வரலாற்றை யெடுத்துரைக்கிறார். க்ருஷ்ணா, யமுநா, ஸரஸ்வதி, காவேரீ இத்யாதி நதிகள் சில ஸமய விசேஷங்களில் கோதாவரீ நதியில் வாஸம் பெற்றுப் புனிதங்களாகின்றன வென்கிற இதிஹாஸம் அங்குக் கூறப்படுகிறது. இந்த ச்லோகத்தில் அந்த நதிகள் கோதாவரியோடு சேர்ந்தனவாகச் சொல்தொடையில் காட்டியிருக்குமழகு வியக்கத்தக்கது. (4)

{ அஸ்மாத்ருசாமபக்ருதௌ சிரதீக்ஷிதாநாமஹ்நாய தேவி! தயதே யதஸௌ முகுந்த:,
தந்நிச்சிதம் நியமிதஸ்தவ மௌலிதாம்நா தந்த்ரீ நிநாதமதுரைச்சகிராம் நிகும்பை:. }

(அந்) ஹே தேவி! அபக்ருதௌ சிரதீக்ஷிதாநாம் அஸ்மாத்ருசாம் (அபி) அஸௌ முகுந்த: அஹ்நாய தயதே இதி யத், தத் தவ மௌலி தாம்நா தந்த்ரீநிநாதமதுரை: கிராம் நிகும்பைச்ச நியமிதஸ் ஸந்—இதி நிச்சிதம்.

கோதாய்! பகவத் பாகவதாபசாரங்களில் நெடுநாளாகவே ஊன்றியிருக்கின்ற என்போல்வார் விஷயத்திலும் எம்பெருமான் சடக்கென அருள்செய்கின்றனே! இதற்கு யாது காரணம்? என்று ஆராயுமிடத்து; இங்ஙனே அறுதியிடப்படுகின்றது; நீர் சூடிக்கொடுத்த பூமாலையினாலும் பாடிக்கொடுத்த பாமாலையினாலும் அப்பெருமான் வசீக்ருதனாய் விட்டபடியாலே என்று நிச்சயிக்கப்பட்டது.

"அன்னவயற்புதுவை யாண்டாள் அரங்கற்குப்
பன்னுதிருப்பாவைப் பல்பதியம்* இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை* பூமாலை
சூடிக்கொடுத்தாளைச் சொல்லு."

என்கிற தனியனைப் பெரும்பாலும் அடியொற்றி இந்த ச்லோகத்தின் உத்தரார்த்தம் அமைந்துளது. ஆண்டாள் இரண்டுவகையான மாலைகளினால் எம்பெருமானைக் கட்டுப்படுத்தினள் என்கிறது. 'சூடிக்கொடுத்த நாச்சியார்' என்று தனக்கு ப்ரஸித்தமாக வழங்கும் திருநாமத்திற்குரிய ஐதிஹ்யத்தின்படியும், "ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகலிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே கோதா"—என்று பட்டர் அருளிச்செய்தபடியும் தான் சூடிக் களைந்த பூமாலையைத் தந்தும், தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல் மாலைகளைப் பாடித் தந்தும்—ஆக இவ்விருவகையான மாலைகளாலே எம்பெருமானை உகப்பித்து, அவனைத் தன்னளவில் ஸர்வாத்மநா விதேயனாக ஆண்டாள் ஆக்கிக்கொண்டாள்; நம் போன்றவர்கள் யாவரும் பகவத்பாகவதாபசாரங்களில் நெடுநாளாகவே ஒருப்பட்டிருந்தும், ஆண்டாளுடைய பரிகரமாகையினாலே நம் குற்றங்களைக் கணிசியாமல் ஆண்டாள் பக்கலில் உள்ள அன்பே காரணமாக நம்மிடத்திலும் எம்பெருமான் க்ருபைபண்ணும் படியாகின்றது, என்றருளிச்செய்தாராயிற்று. கொடியபாவிகளான நாமும், ஆண்டாளுடைய அபிமானத்திலே ஒதுங்கப்பெறில் எம்பெருமானுடைய திருவருளுக்குத் தவறாது இலக்காகலாம் என்பது இதில் ஸூசிதம்.

அபக்ருதௌ = இங்குள்ள ஏகவசநம் ஜாத்யேகவசநமாய் அபசார ராசியைச் சொல்லக்கடவது. இன்னார் விஷயத்தில் அபசாரப்பட்டோமென்று சொல்லாவிடினும் பகவத் பாகவத விஷயங்களிலே என்பது அர்த்தாத்ஸித்தமாகும். [சிரதீக்ஷிதாநாம்] அனேக ஜந்ம பரம்பரைகளாக இப்படியே நாம் அபசாரப்பட்டுவருகிறோமென்று காட்டினபடி. [அஹ்நாய] இது அவ்யயம்; சீக்கிரமாக என்பது பொருள். [தந்த்ரீநிநாத மதுரை:] வீணையின் நரம்பில் நின்றும் தோன்றிய இன்னிசைபோலே மதுரங்கள், ஆண்டாளுடைய திவ்யஸூக்திகள் என்க. "முன்னல் யாழ்பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே" என்று திருவாய்மொழியிலும் இசையின் இனிமைக்குத் தந்த்ரீநாதத்தை ஆழ்வார் எடுத்துக் கூறினமை காண்க. ... ... (5)

{ சோணாதரேபி குசயோரபி துங்க பத்ரா வாசாம் ப்ரவாஹவிபவேபி ஸரஸ்வதீ த்வம்,
அப்ராக்ருதைரபி ரஸைர் விரஜாஸ் ஸ்வபாவாத் கோதாபி தேவி கமிதுர்நநு நர்மதாஸி. } (6)

*(அந்)* நநு தேவி! த்வம் அதரே சோணுஅபி, குசயோ: துங்கபத்ரா அபி வாசாம் ப்ரவாஹ விபவே ஸரஸ்வதீ அபி, அப்ராக்ருதை: ரஸை: விரஜா அபி ஸ்வபாவாத் கோதா அபி, கமிது: நர்மதா அஸி.

ஆண்டாளே! நீ சோணுநதியாயிருக்கச் செய்தேயும் துங்கபத்ரா நதியாயு மிருக்கின்றுய்; ஸரஸ்வதீ நதியாயிருக்கச் செய்தேயும் விரஜாநதியாயுமிருக்கின்றுய்; இயற்கையில் கோதையாக [கோதாவரீ நதியாக] இருக்கச் செய்தேயும் நர்மதா நதியாக இருக்கின்றுய் என்று விரோதம் தோன்றக் கூறி, அதன் பரிஹாரமும் வெகு அழகாகச் செய்யப்படுகின்றது. எங்ஙனே யென்னில்; சோணு என்றது சிவந்ததென்ற படி. *(அதரே சோணு)* "கோவைவாயாள்" என்னுமாபோலே பழுத்த உதடுடையவள் என்றபடி. *(குசயோ: துங்கபத்ரா)* "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந் தொருநாள், தங்குமேல் என்னுவி தங்கும்" என்றும் "கொம்மை முலைகளிடர் தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல், இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?" என்றும் தான் அருளிச் செய்தபடியே திருமுலைத் தடங் களில் எம்பெருமானுடைய நித்ய ஸம்ச்லேஷமாகிற பேற்றைப் பெற்றதனுல் சிறந்த சேமமுடையவள் என்றபடி. திருமுலைகளுக்கு உத்துங்கமான க்ஷேமமாவது எம்பெருமானுடைய நித்யஸம்சலேஷமேயாகும். *(வாசாம் இத்யாதி)* ஆண்டாளுடைய திவ்ய ஸூக்திகளை நோக்குமிடத்து ஸாக்ஷாத் ஸரஸ்வதியின் ஆவிர்பப்பாவமே யிவள் என்னலாம்படியிருக்கும். ஸரஸ்வதீ நதியாயிருக்கச் செய்தேயும் விரஜையா யிருக்கின்றுளென்று விரோதம். பரிஹாரமெங்ஙனே யென்னில்; இப்போது ஸரஸ்வதீ சப்தத்தை நதீபரமாகக் கொள்ளாமல் வாக்கின் அதிஷ்டாநதேவதாபர மாகக்கொள்ளவேணும். விரஜா ஸ்வபாவாத் என்றவிடத்தில் 'விரஜா:' என்று விஸர்க் காந்தமாகப் பதவிபாகம் கொள்ளவேணும். விகதம் ரஜ: யஸ்யாஸ்ஸா விரஜா:, ரஜோகுண மில்லாதவள் என்றபடி. தமோகுணராஹித்யமும் இதனுல் அர்த்த ஸித்தம். சுத்த ஸத்வகுணமே வடிவெடுத்திருப்பவள் என்பது கருத்து. (ஸ்வபாவாத்) திருத்துழாய் பரிமளத்தோடே அங்குரிக்குமா போலே ஸத்வ குணந்தன்னேடே திருவவதரித்தவள் என்றவாறு. ஸ்வபாவாத் என்கிறவிதனை மேலோடே கூட்டியுரைக்கவுமாம்; ஸ்வபாவாத் கோதா என்றுகக்கூடவது. விரோதோத் பாவநஸமயத்தில் 'விரஜா' என்று அவிஸர்க்கமாகவும், விரோதபரிஹார ஸமயத்தில் 'விரஜா:' என்று ஸவிஸர்க்கமாகவும் பதவிபாகம் செய்வதற்குப் பாங்காகச் சொல் தொடை அமைக்கப்பட்டிருக்கின்றது. விரஜாபதத்திற்கு அடுத்தபடியாக ககதபேந் யாதி வர்ணுதியான பதங்கள் பிரயோகிக்கப்பட்டிருந்தால் இங்ஙனே இருவகையாகவும் பதவிபாகம் செய்துகொள்ள அமையாது. இங்கு ஸகாராதியான பதம் (ஸ்வபாவாத் என்பது) பிரயோகிக்கப்பட்டிருத்தலால் ஒலி வடிவத்தில் விஸர்க்கம் உள்ளது போலவும் இல்லாதது போலவும் ஆகின்றது.

*(அப்ராக்ருதை: ரஸை: விரஜா:)* ரஸமென்பது இங்கே ச்லிஷ்டம். தீர்த்தத்திற்கும் ஆசைக்கும் ரஸமென்று பெயர். விரஜாநதி அப்ராக்ருதமான தீர்த்தங்களினுல் நிறைந்தது; ஆண்டாள், ப்ராக்ருத பதார்த்த கோசரமல்லாத (பகவதேகவிஷயக மான) பல்வகை விருப்பங்களினுல் அநவத்யை என்பது இங்கு விவக்ஷிதம்.

[கோதா அபி நர்மதா அஸி] கோதா என்று கோதாவரிக்கும் பெயராதலால் கோதாவரீ நதியாயிருக்கச் செய்தேயும் நர்மதா நதியாக இருக்கின்றாய் என்பது விரோதம். பரிஹாரம் எங்ஙனேயென்னில்; கோதா-கோதையென்னுந் திருநாமமுடையையாயிருக்கின்றாய்; கமிது: நர்மதா அஸி (நர்மாணி ததாதீதி நர்மதா)—என்று வ்யுத்பத்தியாகக் கடவது. 'நர்ம' என்று ச்ருங்கார லீலைக்கும் பரிஹாஸோக்திக்கும் பெயர், எம்பெருமானுக்கு ச்ருங்கார லீலைகளைக் கொடுப்பவள் என்றும், ப்ரணய ஸமாதியிலே அவன்றன்னோடு பரிஹாஸோக்திகளைப் பேசுமவள் என்றும் பொருள் தேறும்.

இந்த ச்லோகத்தில் அபிசப்தங்கள் பிரயோகிக்கப்பட்டிருக்கும் நிலைமையை நோக்குமிடத்து சோணு அபி துங்கபத்ரா; துங்கபத்ரா அபி ஸரஸ்வதி; ஸரஸ்வத்யபி விரஜா விரஜா அபி கோதா; கோதா அபி நர்மதா என்றிங்ஙனே வாக்ய விந்யாஸம் ஸ்வாமிக்கு விவக்ஷிதமென்று கொள்ளலாம்.

**இதில் விரோதாபாஸம், உல்லேகம், ச்லேஷம் என்னும் அலங்காரங்கள்** ஸங்கீர்ணங்களாயிருக்குமழகு நோக்கத்தக்கது. (6)

**வல்மீகத: ச்ரவணதோ வஸுதாத்மநஸ்தே ஜாதோ பபூவ ஸ முநி: கவிஸார்வபௌம:,**
**கோதே! கிமத்புதமிதம் யதமீ ஸ்வதந்தே வக்த்ராரவிந்த மகரந்தநிபா ப்ரபந்தா:.** (7)

**(அந்) கோதே! வஸுதாத்மந: தே ச்ரவணத: வல்மீகத: ஜாத: ஸ: கவிஸார்வபௌம: பபூவ; (தே) வக்த்ராரவிந்த மகரந்தநிபா: அமீ ப்ரபந்தா: ஸ்வதந்தே இதி யத் இதம் அத்புதம் கிம்?**

ஆண்டாளே! பூமிஸ்வரூபையாயிருக்கின்ற உம்முடைய கர்ணஸ்தானீயமான புற்றில்நின்றும் தோன்றிய அந்த வால்மீகி முனிவர் கவிச்சக்ரவர்த்தியென்று ப்ரஸித்தி பெற்றார். (அவருடைய பிரபந்தமாகிய ஸ்ரீராமாயணம் உலகுக்கெல்லாம் போக்யமாக இருக்கின்றது.) உம்முடைய காதுக் குரும்பி யென்னலாம்படியான அம்முனிவரின் வாக்கே அத்தனை மதுரமாயிருக்கும்போது, உம்முடைய ஸாக்ஷாத் திருவாக்கில் நின்றே தோன்றிய ஸ்ரீஸூக்திகள் மதுரங்களாயிருக்கின்றன வென்பதில் என்ன ஆச்சர்யம்? உமது திருவாய் அரவிந்தம் போன்றது. அரவிந்தத்தில் மகரந்தம் பெருகுவது ஸஹஜமேயாதலால் உமது திவ்ய ப்ரபந்தங்களுக்குள்ள மாதுர்யம் வியக்கத்தக்கதன்று.

தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணத்தில் "ச்ரோத்ரம் ஹ்யேதத் ப்ருதிவ்யா: யத்வல்மீக: என்று ஓதப்பட்டுள்ளது. இதன் பொருளாவது—நிலத்தில் தென்படும் புற்றானது பூமிதேவியின் காது என்றபடி. ஆண்டாள் பூமிப்பிராட்டியின் அம்சமாதலால் பூமியென்றே கொள்ளத்தகுதியுடையவள். ஆகவே, புற்று இவளுடைய காதாக ஆயிற்று. புற்றில் நின்றும் தோன்றிய வால்மீகிமுனிவர் ஆண்டாளுடைய காதில் நின்றும் தோன்றினவரென்று சொல்வதற்கு உபபத்தி ஏற்பட்டுவிட்டது. இங்ஙனம் உமது காதில் நின்றும் தோன்றிய ஒருவர், கவியரசர் என்று உலகமெங்கும் புகழ் பெற்றிருப்பதும், அவருடைய பிரபந்தமாகிய ஸ்ரீராமாயணம் மதுரமென்று புகழ் பெற்றிருப்பதும் அபலபிக்கவொண்ணாத விஷயங்களாகும். உலகத்தில் ஒருவருடைய காதில் நின்று உண்டான வஸ்துவுக்கு இவ்வளவு அதிசயம் ஏற்படுவது அப்ரஸித்தம். உம்முடைய காதின் பெருமையோ லோகவிலக்ஷணமாயுள்ளது. காதினுடைய பெருமையே இதுவானால் திருவாக்கின் பெருமையைப்பற்றிப் பேசத்தானு

வதுண்டோ? உமது திருவாயோ அரவிந்தம்; அரவிந்தத்தில் மகரந்தம் ஸ்ரவிப்பது ஸஹஜமேயாதலால், மகரந்தம் போன்ற திவ்ய ப்ரபந்தங்கள் உமது திருவாக்கில் நின்றும் தோன்றின வென்பதில் வியப்பு ஒன்றுமில்லை கிடீர். ஸ்ரீராமாயணத்திற்கு ஏற்பட்டிருக்கும் போக்யதையைப்பற்றிச் சிறிது வியக்கவேண்டுமேயல்லது உம்முடைய திவ்ய ப்ரபந்தங்களுக்கு ஏற்பட்டிருக்கின்ற போக்யதையைப்பற்றிச் சிறிதும் வியக்கவேண்டிய ப்ரஸக்தியில்லை என்பது உள்ளுறை. இதனால், வால்மீகி கோகிலத்தின் சொற்களினும் கிளிமொழிக் கோதையின் சொற்களே பரம மதுரங்கள் என்பது பெறுவிக்கப்பட்டது.

{ போக்தும் தவ ப்ரியதமம் பவதீவ கோதே! பக்திம் நிஜாம் ப்ரணயபாவநயா க்ருணந்த:, }
{ உச்சாவசைர் விரஹஸங்கமஜைருதந்தை: ச்ருங்காரயந்தி ஹ்ருதயம் குரவஸ்த்வதீயா:. } (8)

(அந்) ஹே கோதே! த்வதீயா: குரவ: தவ ப்ரியதமம் பவதீ இவ போக்தும் நிஜாம் பக்திம் ப்ரணய பாவநயா க்ருணந்தஸ் ஸந்த:, விரஹஸங்கமஜை: உச்சாவசை: உதந்தை: ஹ்ருதயம் ச்ருங்காரயந்தி.

ஆண்டாளே! உம்முடைய திருத்தகப்பன்மார்களான பெரியாழ்வார் முதலிய ஆழ்வார்கள் உமது வல்லபரான பெருமாளை நீர் அநுபவிப்பது போலவே தாங்களும் அநுபவிக்க விரும்பித் தங்களுடைய பக்தியை அநுராக சைலியிலே மாற்றிப் பேசா நின்றவர்களாய்ப் பலவகைப்பட்ட ஸம்ச்லேஷ விச்லேஷப் பாசுரங்களினால் தமதுதிருவுள்ளத்தை ச்ருங்கார ரஸாநுபவசாலியாக ஆக்கிக்கொள்ளுகிறார்கள்.

ஆண்டாள் இயற்கையாகப் பெண்ணாய்ப் பிறந்தவள்; புருஷனைப் புருஷர்கள் அநுபவிப்பதிற்காட்டிலும் பெண்டிர்அநுபவிப்பதுபாங்குடைத்தாதலால் புருஷோத்தமனான பெருமானை ஸ்த்ரீரத்னமான ஆண்டாளனுபவிப்பது பாங்காக அமைந்தது. அமையவே, இவளுடைய திவ்யப்ரபந்தத்தில் "ஊனிடையாழி சங்கு த்தமற்கென்று உன்னித்தெழுந்த வென் தடமுலைகள்"என்றும், "கொங்கைமேல் குங்குமத்தின் குழம் பழியப் புகுந்தொருநாள், தங்குமேல் என்னாவி தங்கு மென்றுரையீரே" என்றும், "கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கைதன்னைக் கிழங்கோடும், அள்ளிப்பறித் திட்டவன் மார்பிலெறிந்து என்னழலைத்தீர்வேனே" என்றும், "கொம்மை முலைக ளிடர்தீர" என்றும் உள்ள பாசுரங்கள் பொருத்தமாகவும் ஸஹ்ருதய ஹ்ருதயங்கம மாகவும் விளங்கின. இங்ஙனம் ஆண்டாளைப் போலவே புருஷோத்தமனை நாமும் அநுபவிக்கவேணும், நாமும் பாசுரமிட்டுப்பேசவேணும்—என்று ஆசைகொண்ட ஆழ்வார்கள் என் செய்தார்களென்னில் பரமபுருஷ விஷயத்திலே தங்களுக்குண்டான பக்தியை நாயக விஷயத்தில் நாயகிகளுக்குண்டாகும் அநுராகத்தின் ஸமாதியிலே அமைத்து, தாங்களும் ஸ்த்ரீபாவனை கொண்டவர்களாகி எம்பெருமானோடு ஸம்ச்லேஷிப்பதும் விச்லேஷிப்பதுமான நிலைமையையும் எய்தி, அந்த ஸம்ச்லேஷங்களுக்கு அநுரூபமான பாசுரங்களையும் பேசி, இங்ஙனே தங்களுடைய ஹ்ருதயத்தையும் ச்ருங்கார ரஸைகதாநமாக ஆக்கிக்கொண்டார்கள் என்றதாயிற்று.

இத்தால், அநுகாரரீதியிலே அமைந்த ஆழ்வார்களின் பகவதநுபவத்திற் காட்டிலும், தன் இயற்கைக்கு இணங்கினதாகவே அமைந்த ஆண்டாளுடைய பகவதநுபவம் ரஸவத்தரம் என்பது பெறப்படும்.

த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் (பத்யௌ பத்மாஸஹாயே ப்ரணயிநி பஜத: ப்ரேயஸீபாரதந்த்ர்யம் பக்தி: ச்ருங்காரவ்ருத்த்யா பரிணமதி முநேர்பாவபந்த ப்ரதிம்நா) என்று ஸ்வாமி தாமே அருளிச்செய்த ச்லோகமும் இங்கு இரண்டாம் பாதத்திற்குப் பொருத்தமாக அநுஸந்திக்கவுரியதாகும்.

(பவதீ இவ) என்றவிடத்தில்—உபமேயாத் சதகுணமுபமாநம்' என்ற ஆலங்காரிக ஸமயம் ஸ்மரிக்கத்தகும். ஆழ்வார்களின் அநுபவத்திற்கு ஆண்டாளுடைய அநுபவத்தை உபமானமாகக் கூறியதனால் இதற்குள்ள அதிசயம் விளங்கிற்று.

(உச்சாவசை:) "உச்சாவசம் நைகவிதம்" என்பது அமரம். [விரஹ ஸங்கமஜை: உதந்தை:] நம்மாழ்வார் பெரியாழ்வார் திருமங்கைமன்னன் முதலானாருடைய திவ்ய ஸூக்திகளில் *அஞ்சிறைய மடநாராய் *ஆடியாடி* முதலான பதிகங்களால் விரஹ வேதனைகளும் *இவையு மவையு முவையும்* இத்யாதிகளான பலபதிகங்களினால் ஸம்ச்லேஷ ஸந்தோஷங்களும் காணத்தக்கன. விச்லேஷத்திலே தூதுவிடுவது மடலூர்வது வாய்வெருவுவது முதலியபலவகைகளிலும், ஸம்ச்லேஷத்திலேயும் இங்ஙனே வேறு பலவகைகளும் உண்டாதலால் "உச்சாவசை:" என்றது.

"குரவஸ் த்வதீயா:" என்றவிடத்தில் சில விவக்ஷிதங்கள் உண்டு; இங்குள்ள குருசப்தம் பித்ருபர்யாயம். "பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே" என்று நாடோறும் ஸ்ரீவைஷ்ணவவுலகம் ஸேவிக்கிற வாழித் திருநாமத்தின்படி ஆண்டாள் பெரியாழ்வார்திருமகளென்று ப்ரஸித்திபெற்று இருந்தாலும் ஆழ்வார்கள் பதின்மர்க்கும் இவள் ஒரு திருமகள் என்பது பூருவாசாரியர்களின் ஒருமிடறான திருவுள்ளம். அதையடியொற்றியே ஸ்வாமி இங்கு குரவ: த்வதீயா: என்றருளிச்செய்தபடி. மணவாளமாமுனிகளும் உபதேசரத்தினமாலையில் *அஞ்சுகுடிக்கொரு சந்ததி* என்றருளிச்செய்கிறாராண்டாளை. அஞ்சுகுடி யென்றவிதற்கு இரண்டு வகையான பொருள் ஏற்கும்; பொய்கையாழ்வார் தொடங்கிப் பெரியாழ்வாரளவுமுள்ள ஆழ்வார்களைக் கணக்கிட்டால் அவ்வாழ்வார்களின் குடி ஐந்து என விளங்கும்; எங்ஙனே யென்னில், பொய்கை பூதம் பேயாழ்வார் மூவரும் சேர்ந்து முதலாழ்வார்களென்று ஒரு ஸமுதாயமாக வழங்கப் பெறுதலால் அம்மூவருஞ்சேர்ந்து ஒருகுடி; திருமழிசைப்பிரான் நம்மாழ்வார் குலசேகராழ்வார் பெரியாழ்வார் ஆகிய நால்வரும் நான்கு குடி; ஆகவே அஞ்சுகுடியென்பது ஆண்டாளுக்கு முன்னே திருவவதரித்த ஆழ்வார்களனைவரையும் சொல்லிற்றாகி, அவர்கட்கெல்லாம் ஒரு சந்ததியாகத் தோன்றியவள் ஆண்டாள் என்றதாக ஒரு நிர்வாஹம். இனி மற்றொரு நிர்வாஹமாவது—அஞ்சுகுடி யென்பதை அஞ்சுகின்ற குடி என (வினைத்தொகையாக)க் கொண்டு ஆழ்வார்கள் பதின்மரையும் விவக்ஷிக்கிறபடி. எம்பெருமானுக்கு என் வருகிறதோவென்று அஞ்சுகின்ற தன்மை பெரியாழ்வார்க்கு மிகவும் விசேஷித்து இருப்பினும் ஆழ்வார்கள் பதின்மர்க்கும் அந்த அச்சம் ஸாதாரணமாகவுண்டு. இது "மங்களாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள் தங்கள் ஆர்வத்தளவுதானன்றி" என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தினாலேயே நன்கு காட்டப் பட்டது. பெரியாழ்வார்க்குப்போலே பொங்கும் பரிவு மற்றையோர்க்கு இல்லை யெனினும் மங்களாசாசனத்தில் ஆர்வம் (அதாவது, அஞ்சுகின்ற தன்மை) அனைவர்க்குமுண்டு என விளங்குதலால் அஞ்சுகுடி யென்ற சொல்லால் ஆழ்வார்களனைவரையும் கொள்வது பொருத்தமுடையதே

யாகும். ஆகவே பதின்மர்க்கும் ஆண்டாள் புதல்வியென்றதாயிற்று. ஆக, த்ரவஸ்த்வதீபா: என்றவிது ஆழ்வார்கள் பதின்மரையுமே சொல்லிற்றாகும். சில ஆழ்வார்களுக்கு "பந்தீம் நிஜாம் ப்ரணயபாவநயா க்ருணந்த:" என்கிற அம்சம் இல்லையாகிலும் சத்ரிந்யாயத்தாலே அவர்களையுங் கூட்டிக் கூறக் குறையில்லை யென்க. (8)

மாதஸ்ஸமுத்திதவதீமதிவிஷ்ணுசித்தம் விச்வோபஜீவ்யமம்ருதம் வசஸா துஹாநாம்,
தாபச்சிதம் ஹிமருசேரிவ மூர்த்திமந்யாம் ஸந்த: பயோதிதுஹிதுஸ் ஸஹஜாம்
விதுஸ்த்வாம். (9)

*(அந்)ஹேமாத:! அதிவிஷ்ணுசித்தம் ஸமுத்திதவதீம் விச்வோபஜீவ்யம் அம்ருதம் வசஸா துஹாநாம், தாபச்சிதம் (அதஏவ) ஹிமருசே: அந்யாம் மூர்த்திம் இவ (ஸ்திதாம்) த்வாம் ஸந்த: பயோதி துஹிது: ஸஹஜாம் விது:.*

தாயாகிய கோதையே! உம்மைப் பெரியோர்கள் பாற்கடலின் திருமகளாராகியபெரியபிராட்டியார்க்கு உடன் பிறந்தவளாக உணர்கின்றார்கள்; எங்ஙனேயென்னில்; தேவர்கட்காக அமுதம் கடைந்தெடுத்தகாலத்தில் *அச்வாப்ஸரோ விஷஸுதா விதுபாரிஜாத லக்ஷ்ம்யாத்மநா பரிணதோ ஜலதிர் பபூவ* என்று (அதிமாநுஷஸ்தவத்தில்) ஆழ்வான் அருளிச்செய்தபடியே பிராட்டி யோடுகூட சந்திரனும் தோன்றியவன்; அந்தசந்திரனே நீராக (ஆண்டாளாக) வடிவெடுத்துவந்தாற் போலேயிருத்தலால் உம்மை பெரிய பிராட்டியர்ருடன் பிறந்தவளாகச்சொல்லுதல் பொருந்தும். நீர் திருமேனியின் ஒளி விளக்கத்தினுல் மாத்திரம் சந்திரனையொத்திருக்கின்றீரல்லீர்; மற்றும் பலவகைகளாலும் அவனோடு ஸாதர்மியம் பெற்றிராநின்றீர். எங்ஙனேயென்னில், விஷ்ணுசித்தோதயம் அவனுக்குமுண்டு. உமக்குமுண்டு. வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தரிடத்திலே நீர் தோன்றியதால் உம்முடைய விஷ்ணுசித்தோதயம் ப்ரஸித்தம். "சந்த்ரமா மநஸோ ஜாத:" என்ற சுருதியின்படி அவன் விஷ்ணுவின் சித்தத்தில் தோன்றியவனாதலால் அவனுடைய விஷ்ணுசித்தோதயமும் ப்ரஸித்தம். ஸகல ஜனங்களும் விரும்பி ஆதரிக்கத்தகுந்த நிலவாகிற அமுதத்தை அவன் அளிக்கிறான்; நீரும் ஸகல ஜாதியபக்தஜனங்களும் வாசியற அதிகரிக்கலான அருளிச்செயலமுதத்தை அளித்திட்டீர். அவன் தனது கிரணங்களினால் ஸகலஜனங்களினுடையவும் தேஹதாபத்தைத் தவிர்க்கின்றான்; நீரும் ஸ்ரீஸூக்திகளாலும் திவ்யமங்களவிக்ரஹ ஸேவையையளிப்பதனாலும் எங்களுடைய ஆத்யாத்மிகம் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் என்கிற தாபத்ரயத்தைத் தவிர்த்தருளாநின்றீர். ஆக இவ்வகைகளாலே சந்திரனோடு நீர் ஒற்றுமை பெற்றிருந்தால் லக்ஷ்மீஸஹஜாதத்வம் சந்திரனுக்குப்போலவே உமக்கும் அழகியதாகப் பொருந்துகின்றது என்றாராயிற்று.

'பெரிய பிராட்டியார் தாமே ஆண்டாளாக வந்து பிறந்தாள்' என்று சொல்லுவதும், 'பெரிய பிரட்டியார்க்கு ஆண்டாள் திருத்தங்கையார்போல வந்து பிறந்தாள், என்று சொல்லுவதும் ஸம்ப்ரதாயத்திலுண்டாதலால் இந்த கோதாஸ்துதியில் மேற்குறித்த இரண்டுவகையான வார்த்தைகளையும் ஸ்வாமி ஆதரித்துப் பேசுகிறார். முதல் "கமலாமிவாந்யாம்" என்றார். இதில் "பயோதி துஹிது: ஸஹஜாம்" என்றார். இரண்டுபடியும் சொல்லக்குறையில்லையென்று காட்டினபடி. ஆண்டாள் பெரிய பிராட்டியார்க்கு உடன் பிறந்தவள் என்கிறப்ரஸித்தியை இங்ஙனே ச்லேஷவகையினால் மூதலித்தருளின சமத்காரம் வியக்கத்தக்கது. ஆண்டாளுக்குச் சந்திர

னோடு ஸாதர்மியத்தை நிர்வஹித்து அம்முகத்தாலே இவளுடைய லக்ஷ்மீஸஹஜா தத்வத்தை நிரூபித்திருப்பதனால் விலக்ஷணமான கவிதாசாதுர்யம் விளங்கா நின்றது

இதில், 1. அதி விஷ்ணுசித்தம் 2 விச்வோபஜீவ்யம் 3. அம்ருதம் 4. தாபச்சிதம் என்னும் பதங்களில் சிலேடை அமைந்திருக்குமழகு குறிக்கொள்ளத்தக்கது. (1) விஷ்ணு சித்தரிடத்திலே; விஷ்ணுவினுடைய மநஸ்ஸிலே என்று இரண்டு அர்த்தம். மற்றவை ஸ்பஷ்டம். ... ... ... .... (9)

{ தாதஸ்து தே மதுபித: ஸ்துதிலேசவச்யாத் கர்ணாம்ருதஸ்துதி சதை ரநவாப்த பூர்வம், }
{ த்வந்மௌலிகந்த ஸுபகாமுபஹ்ருத்ய மாலாம் லேபே மஹத்தரபதாநுகுணம் ப்ரஸாதம். } (10)

(அந்) (ஹே கோதே!) தே தாத: து ஸ்துதிலேசவச்யாத் மதுபித: கர்ணாம்ருதஸ்துதி சதை: அநவாப்தபூர்வம் மஹத்தரபதாநுகுணம் ப்ரஸாதம் த்வந்மௌலிகந்த ஸுபகாம் மாலாம் உபஹ்ருத்ய லேபே.

ஆண்டாளே! உம்முடைய திருத்தகப்பனாராகிய பட்டர்பிரான், ஸ்வல்ப ஸ்தோத்ரத்திற்கு வசப்படக் கூடியவனான எம்பெருமானிடத்தில் நின்றும் செவிக்கினிய செஞ்சொற்களை நூற்றுக்கணக்காகப் பாடின மற்றையாழ்வார்களாலே முன்பு அடையப்படாததான பெரியாழ்வாரென்னும் சிறப்புப் பெயரை, நீர் சூடிக்களைந்த மாலையை ஸமர்ப்பித்ததனால் அடைந்தார் என்கிறார்.

ஆழ்வார்களுக்குள்ளே ஆண்டாளுடைய திருத்தகப்பனாரான பட்டர்பிரான் பெரியாழ்வாரென்று வழங்கப்படாநின்றார். இவ்வாழ்வார்க்கு எந்த அம்சத்தினால் பெருமை? என்று ஆராயவேணும். மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்தவர்களான முதலாழ்வார்களும் திருமழிசைப்பிரான் நம்மாழ்வார் முதலானவர்களும் இவரைக் காட்டிலும் திருநக்ஷத்திரத்தில் பெரியவர்களாதலால் வயதினால் பெருமை இவர்க்குச் சொல்லவொண்ணாது இனி, எண்ணிக்கையில் அதிகமான பாசுரங்களை அருளிச்செய்வதனாலாகும் பெருமையாவது சொல்லத்தகுமோவென்று பார்க்கில், அவ்விஷயத்தில் நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாருமே பெருமை பெற்றவர்களாவர். ஆகவே, எக்காரணத்தினால் இப்பட்டர்பிரானுக்குப் பெரியாழ்வாரென்ற பெயர் வழங்கலாயிற்றென்று உணரவேண்டுவது அவசியமாயிற்று. ஆண்டாள் சூடிக்களைந்த பூமாலையை இவ்வாழ்வார் எம்பெருமானுக்கு நாடோறும் ஸமர்ப்பித்து வந்ததனால் மிகவும் திருவுள்ளமுவந்த எம்பெருமான் இவர்க்குப் பெரியாழ்வார் என்று விருது உண்டாகும்படி அருள்புரிந்தான் — என்கிறது இந்த ச்லோகத்தில்.

• இங்ஙனே அருளிச்செய்திறவிது ஆசிரியர் தாம்செய்தருளும் ஒரு உத்ப்ரேக்ஷையாயிருக்கவடுக்கும். ''மங்களாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள், தங்களார்வத்தளவு தானன்றிப்—பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான், பெரியாழ்வாரென்னும் பெயர்'' என்ற ஆசார்ய திவ்யஸூக்தியின்படி மற்றையாழ்வார்களிற் காட்டிலும் மங்களாசாசனத்தில் அளவுகடந்த ஊற்றமுள்ளமை காரணமாகவே இவ்வாழ்வார்க்குப் பெரியாழ்வாரென்ற திருநாமம் வழங்கலாயிற்றென்பது பூர்வாசார்ய ஸம்ப்ரதாயமாகையாலே, இங்கு இந்த ச்லோகத்தில் ஸ்வாமி அருளிச்

செய்வது ஆண்டாளுடைய ஸ்தோத்ரத்திற்கு அநுகுணமான உத்ப்ரேக்ஷையாகும் என்று பெரியோர்கள் அருளிச்செய்யும்படி. மந்யே சங்கே த்ருவம் ப்ராயோ நூநமித்யே வமாதிபி:, உத்ப்ரேக்ஷா வ்யஜ்யதே சப்தை: இவசப்தோபி தாத்ருச:'' என்கிற ஆலங்காரிக ஸமயத்தின்படி உத்ப்ரேக்ஷாவ்யஞ்ஜகங்களான மந்யே சங்கே இத்யாதிகளில் ஒன்றும் இந்த ச்லோகத்திற்காணமையாலே இதனை உத்ப்ரேக்ஷையாகக் கொள்வதில் **அத்தனை** ஸ்வாரஸ்யமில்லையாதலால் இது வஸ்துஸ்திதியை அருளிச்செய்தபடியேயாகும் என்பாருமுண்டு. அப்போது, பெரியாழ்வாரென்னும் பெயர் நிகழ்ந்தமைக்கு இரண்டுவகையான காரண நிர்வாஹமும் ஸம்ப்ரதாயஸித்தம் என்று கொள்ளக் கடவது.

**மஹத்தரபதாநுகுணம் என்றதற்கு "நித்யவிபூதிப்ரதாநாநுரூபம்'' என்று சிலர் வியாக்**கியானமுரைத்திருப்பது ஆசிரியரின் விவக்ஷைக்கு ஒத்திருக்குமாவென்று ப்ராஜ்ஞர் **கள் பராமர்சிக்க.**

**ஸ்துதிலேசவச்யாத் என்பது** எம்பெருமானைப்பற்றின ஸ்வபாவோக்தி. தன்னைக் குறித்து இரண்டொரு பாசுரம் பாடினவளவிலேயே மஹத்தரபதாநுகுணமான அநுக்ரஹத்தைஎம்பெருமான் செய்யவல்லவனாயிருந்து வைத்தும், செவிக்கினிய செஞ்சொற்கள் பலவற்றையும் பாடினவிடத்தும் அது செய்யாதேயிருந்தானென் பதை தெரிவிக்கும் பூர்வார்த்தத்தில் "கர்ணம்ருதை:ஸ்துதிசதை:''என்ற வ்யஸ்தமானபாடம் பொருந்தாது; 'கர்ணம்ருதஸ்துதிசதை:'' என்று ஸமஸ்தமானபாடம் ஆசிரியர் அருளிச் செய்ததாயிருக்கும் என்று பல பெரியோர் பகர்வதுண்டு. இந்த ஸமஸ்த பாடந் தன்னில் என்ன ஸ்வாரஸ்யமென்னில்! (கர்ணம்ருதாநி ஸ்துதிசதாநி யேஷாம் தே-கர்ணம்ருத ஸ்துதி சதா:, தை:) என்று பஹுவ்ரீஹி ஸமாஸமாகி, கர்ணம்ருதமான ஸ்துதி சதங்களைப்பாடின மற்றையாழ்வார்களாலும் [நம்மாழ்வாராலுங்கூட என்றபடி] அடையப் படாததான அநுக்ரஹத்தை இவ்வாழ்வார் பெற்றார் என்னுமிடம் நன்கு புலனாகின்றது. "இன்கவிபாடும் பரம கவிகள்'' என்று சிறப்பித்துக் கூறப்பட்ட முதலாழ்வார்களுக்கும் "பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்'' என்றும், "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன் மாலைகள் சொன்னேன்'' என்றும் சொல்லுகிறபடியே கர்ணம்ருதஸ்துதிசதங்களைப்பாடின நம்மாழ்வார்க்கும் மற்றும் இத்தகையரான திருமழிசைப்பிரானுக்கும் குலசேகரப் பெருமாளுக்கும் கிடைக்காததான அநுக்ரஹத்தைஆண்டாள்சூடிக்களைந்த மாலையையுபஹரித்தது காரணமாக இவ்வாழ்வார் பெற்றார் என்கைக்கு ஸமஸ்தமான பாடமே சிறக்குமென்பர்.

**த்வந்மௌலிகந்த ஸுபகாம்**—உம்முடைய திருக்குழற் கற்றையின் நறுமணத்தினால் வாஸிதமான என்றபடி. "மஹத்தரபதம் லேபே" என்னாமல் "மஹத்தரபதாநுகுணம் ப்ரஸாதம் லேபே'' என்றருளிச் செய்ததற்குக் கருத்து என்னென்னில், பெரியாழ்வார் என்னும் திருநாமத்தை எம்பெருமான் தானே அளித்திருந்தானாகில் "மஹத்தரபதம் லேபே" என்னலாம்; இவரது பெருமையைக்கண்ட மஹநீயர்களே இவர்க்குப் பெரியாழ்வார் என்ற திருநாமத்தை வழங்கத்தொடங்கினராதலாலும், அதுதான் எம்பெருமானுடைய திருவுள்ளத்தைப் பின்சென்றேயாதலாலும் 'மஹத்தரபதாநுகுணம் ப்ரஸாதம் லேபே எனப்பட்டது.

இந்த ச்லோகத்தினுல் ஆண்டாள் சூடிக்களைந்த மாலையின் சிறப்பு வருணிக்கப் பட்டதாயிற்று. ... ... ... ... .... (10)

{ திக் தக்ஷிணாபி பரிபக்த்ரிமபுண்யலப்யாத் ஸர்வோத்தரா பவதி தேவி! தவாவதாராத்,
யத்ரைவ ரங்கபதிநா பஹுமாநபூர்வம் நித்ராலுநாபி நியதம் நிஹிதா: கடாக்ஷா:. } (11)

(அந்) நித்ராலுநா அபி ரங்கபதிநா கடாக்ஷா: பஹுமாநபூர்வம் யத்ரைவ (திசி) நியதம் நிஹிதா: ஸா திக் தக்ஷிணா அபி, ஹே தேவி! பரிபக்த்ரிம புண்யலப்யாத் தவ **அவதாராத் ஸர்வோத்தரா** பவதி.

ஆண்டாளே! *உறங்குவான் போல் யோகு செய்யும் பெருமானுகிய அழகிய மணவாளன் எந்தத் திசையையே மிக்க ஆதரத்தோடு கடாக்ஷித்துக்கொண்டு திருக் கண்வளர்ந்தருளுகிருரோ, அந்தத் திசை தென்திசையாயிருக்கச்செய்தேயும் பரம பாக்யத்தின் பலனுகவுண்டான உமது திருவவதாரத்தினுல் [ஸர்வோத்தரா பவதி] எல்லார்க்கும் வடதிசையாகின்றது. (ஸர்வோத்க்ருஷ்டமான திசையாகின்றது) என்றபடி.

ஆண்டாள் திருவவதரித்தது ஸ்ரீவில்லிபுத்தூரில். அவ்வூர் உள்ளது தென் திசையில். அது தென்திசையாயிருக்கச் செய்தேயும் வடதிசையாக விருக்கின்ற தென்று விரோதாபாஸாலங்காரம் தோன்ற ஒரு சமத்காரமாக அருளிச் செய்கிருர். **உத்தரா** என்கிற வடசொல் வடதிசையைச் சொல்வதுபோலவே, 'சிறந்தது' என்னும் பொருளையும் சொல்வதாதலால் முந்தின பொருளைக்கொண்டு விரோதோத்பாவநமும் பிந்தின பொருளினுல் அதற்குப் பரிஹாரமும் உய்த்துணரத்தக்கது. ஆண்டாளுடைய திருவவதாரத்தினுல் தென்திசை மிகவும் சிறந்ததாயிற்று என்றவாறு. அந்தச் சிறப்பை ஸமர்த்தித்து உத்தரார்த்தம் அருளிச்செய்கிருர். [யத்ரைவ] என்று தொடங்கி.) "குடதிசைமுடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசை யிலங்கைநோக்கி" என்றும் "மன்னுடையவிபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்கண்வைத்த" என்றும் சொல்லுகிறபடியே பெரிய பெருமாள் தென்திசைநோக்கிப்பள்ளிகொண்டிருப்பதானது விபீஷணுழ்வானைக் கடாக்ஷிப்பதற்காக என்று புராணவரலாறு இருந்தாலும், ஆண்டாளுடைய திருவவதாரஸ்தலமாகிய ஸ்ரீவில்லிபுத்தூரில் அபிநிவேசத்தினுல்தான் அத்திசையை நோக்கியிருக்கின்றுரென்று கொள்வது சிறக்கும் என்று இங்கு ஆசிரியர் திருவுள்ளம் போலும். இந்தத் திருவுள்ளத்தை ஸ்பஷ்டமாக க்ரஹிப்பிக்கவல்ல வாசகம் மூலத்தில் இல்லையாகிலும் இங்குற்ற உத்தரார்த்தத்தின் அமைப்பை நோக்குமிடத்து இங்ஙனே சொல்லலாயிருக்குமென்க.

பரிபக்த்ரிம புண்யலப்யாத்—பலன் கொடுக்க உந்முகமானது பரிபக்த்ரிமம் எனப் படும். பரிபக்வமான ஸுக்ருதத்தின் பயனுக விளைந்ததாம்; "எமக்காகவன்றே யிங்காண்டாளவதரித்தாள், குன்றுத வாழ்வான வைகுந்த வான் போகந்தன்னை யிகழ்ந்து ஆழ்வார் திருமகளாராய்" என்ற பேராசிரியர் அருளிச் செயலின்படி அஸ்மதாதிகளான ஸம்ஸாரிகளின் ஸுக்ருத பலனுகவிறே ஆண்டாள் திருவவதரித்தது. **நித்ராலுநா**—ஆலுச்ப்ரத்யயாந்தமான சப்தம், நித்ரையையுடையவன் நித்ராலு. 11

{ ப்ராயேண தேவி! பவதீவ்யபதேசயோகாத் கோதாவரீ ஜகதிதம் பயஸா புநீதே,
யஸ்யாம் ஸமேத்ய ஸமயேஷு சிரம் நிவாஸாத் பாகீரதீப்ரப்ருதயோபி பவந்தி புண்யா:. } (12)

(அந்) ஹே தேவி! பாகீரதீப்ரப்ருதய: அபி யஸ்யாம் (கோதாவர்யாம்) ஸமயேஷு ஸமேத்ய சிரம் நிவாஸாத் புண்யா: பவந்தி, ஸா கோதாவரீ பவதீய்யபதேசயோகாத் இதம் ஜகத் பயஸா புநீதே ப்ராயேண.

கோதாய்! கங்கை முதலிய நதிகளும் யாதொரு கோதாவரியிலே ஸமய விசேஷங்களில் வந்து கலந்து நெடுங்காலம் வஸித்துப் புனிதங்களாகின்றனவோ. அப்படிப்பபட்ட கோதாவரீ நதியானது உம்முடைய திருநாமத்தைத் தான் வஹிப் பதனாலே போலும் இவ்வுலகைத் தீர்த்தத்தினால் புனிதமாக்குகின்றது.

பஞ்சவடியில் இராவணன் பிராட்டியை அபஹரித்துக் கொண்டு போகும் போது "ஹம்ஸ காரண்டவாகீர்ணாம் வந்தே கோதாவரீம் நதீம், க்ஷிப்ரம் ராமாய சம்ஸ த்வம் ஸீதாம் ஹரதி ராவண:" என்று கோதாவரியை நோக்கி 'என்னை இராவணன் கவர்ந்து சென்றதாகப் பெருமாளிடம் அறிவிப்பாயாக' என்று வேண்டிக்கொண்டாள்; அங்ஙனம் வேண்டிக் கொள்ளாவிடினும் பெருமாள் பக்கலில் அறிவிக்கவேண்டிய முறைமை யிருந்தும் வேண்டிக்கொண்டபின்பும் அறிவியாதேயொழிந்தது. இது இராவணன் பக்கலில் அச்சத்தாலேயிருக்கலாம். யமுனை கம்ஸனுடைய மாளிகையின்கீழே பெருகா நின்றதாகையாலே தீயபுந்திக்கஞ்சனுக்கு அஞ்சவேண்டியிருந்தும் அஞ்சாதே "யமுநாம் சாதிகம்பீராம் நாநாவர்த்தஜஷாகுலாம், வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோத கோ யயௌ" என்னும்படி முழங்காலளவாகத் தன்னை வற்றிக்கொடுத்தது. ஆதலால் அது *தூய பெருநீர் யமுனை* என்று கோதை குலாவிக்கூறப் பெற்றது.

அங்ஙனம் கிஞ்சித்கரிக்கும்படியான பாக்கியத்தை கோதாவரீ இழந்தமையால் அபரிசுத்தியே இதற்கு உண்டாயிற்று. அந்த அசுத்தி தொலைந்து தூய்மைபெறு தற்காக அந்தக் கோதாவரீ தவம் புரிந்ததாகவும் தவத்தினால் ப்ரஸந்த மான தேவதை ஒப்புயர்வற்ற தூய்மையை வரமாக அநுக்ரஹித்ததாகவும் புராணவர லாறு உள்ளது. அவ்வளவு தூய்மை அதற்கு உண்டானதற்கு உண்மையில் யாது காரணமென்னில் கோதா என்கிற திருநாமத்தைத் தன்னுடைய நாமத்தில் ஏகதேச மாக வஹிக்கப் பெற்றிருப்பதுவே காரணமாகும் என்று ஸ்வாமி சமத்காரம் பொலிய உத்ப்ரேக்ஷிக்கிறபடி.

நைஷத காவ்யத்தில் அன்னப்பறவை நள சக்ரவர்த்தியின் பெருமையைத் தமயந்தி பக்கல் பகரும்போது *அஸ்மத் கில ச்ரோத்ரஸுதாம் நிபிய ரம்பா சிரம் பாமதுலாம் நலஸ்ய, தத்ராநுரக்தா தமநாப்ய பேஜே தந்நாமகந்தாத் நலகூபரம் ஸா*: என்று ரம்பையானவள் நளனை மணஞ்செய்துகொள்ள விரும்பிப் பெறுமையினாலே அவனது பெயரை ஏக தேசமாகக் கொண்டிருக்கிற நளகூபரனையாவது மணம் புரிவோமென்றெண்ணி அவனை மணந்து கொண்டாள் என்று இதில் சொல்லப்பட்டது. இது ஒருபுடை ஒப்பு நோக்கத்தக்கது இங்கு.

கோதாவரிக்கு எப்படிப்பட்ட தூய்மை உண்டாயிற்றென்னில் அது உத்த ரார்த்தத்தில் விவரிக்கப்படுகிறது. ஏற்கெனவே சிறந்த பெருமை பெற்றுள்ளனவான கங்கை முதலிய நதிகளுங்கூட ஸமயவிசேஷங்களில் கோதவரீ நதியில் நெடும் போது வாஸம்பண்ணித் தூய்மைபெறக் கடவன என்று தேவதாநுக்ரஹமேற்பட்ட தாகப் புராண வரலாறு உள்ளது. பரம பவித்திரங்களாக ப்ரஸித்தங்களான கங்கை முதலிய நதிகளுக்கும் பரிசுத்தி கோதவரீ மூலகமென்னில் இதனுடைய தூய்மை

எப்படிப்பட்டதாயிருக்கவேணும்; வாசாமகோசரம் என்னவேணுமத்தனே. அத்தகைய தூய்மை கோதாதேவியின் திருநாம ஸம்பந்தநிபந்தநமே பேலும் என்று உத்ப்ரேக்ஷித்தாராயிற்று. ப்ராயேண என்பது உத்ப்ரேக்ஷாலிங்கம் என்பது ஆலங்காரிக ஸமய ஸித்தம்.

"யஸ்யாம் ஸமேத்ய" இத்யாதிக்கு ஆவச்யகமான புராண வரலாற்றின் ஆகரத்தையும் விவரணத்தையும் பௌராணிகர் பக்கலிலே விளங்கக் கேட்டுணர்வது. ... .... ... ... ... ... (12)

நாகேசயஸ்ஸுதநு! பக்ஷிரத: கதம் தே ஜாதஸ் ஸ்வயம்வரபதி: புருஷ: புராண:,
ஏவம்விதாஸ்ஸமுசிதம் ப்ரணயம் பவத்யா: ஸந்தர்சயந்தி பரிஹாஸகிரஸ்ஸகீநாம். (13)

(அந்) ஹே ஸுதநு! நாகேசய: பக்ஷிரத: புராண: புருஷ: தே ஸ்வயம்வரபதி: கதம் ஜாத:? (இதி) ஏவம்விதா: ஸகீநாம் பரிஹாஸகிர: பவத்யா: ஸமுசிதம் ப்ரணயம் ஸந்தர்சயந்தி.

அழகியமேனிபடைத்த ஆண்டாளே! அரவணையின்மேற் பள்ளிகொள்பவனும் பறவையை வாஹநமாகவுடையவனும், யுவாவாயிருக்கையன்றிக்கே நெடுநாளைக் கிழவனுமான ஒரு புருஷன் உனக்கு ஸ்வயம்வர பர்த்தாவாக எங்ஙனே வாய்த்தான்? என்றிப்படி தோழிமார் மொழியும் பரிஹாஸ வார்த்தைகள் உம்முடைய காதல் ஸமுசித ஸ்தலத்திலேயே அமைந்தது என்பதை வெளிப்படுத்துகின்றன.

தோழிமார்கள் ஒருவருக்கொருவர் விநோதமாகப் பரிஹாஸ வார்த்தைகள் பேசிக்கொள்ளுங்கணக்கிலே ஆண்டாளை நோக்கி அவளுடைய தோழிமார் சிலர் பரிஹாஸ மொழிகளைப் பகர்வது உண்டு; எங்ஙனேயென்னில், கோதாய்! உலகில் கன்னிகைகளுக்குத் தாய்தந்தையர் முயன்று விவாஹம் செய்விப்பது வழக்கம், உன்னுடைய விவாஹமும் அவ்விதமாகவே நடந்திருந்தால் அதிலுள்ள குறை நிறைகளைப்பற்றி விசாரப்படவேண்டிய அவசியமில்லை; உனது விவாஹமோ அங்ஙனம் நடைபெறவில்லை. ஸ்வயம்வரம் கோடித்து நீயாகவே நாயகனை வரித்தாய்; அப்படிப்பட்ட நீ பலவகைக் குறைகளுக்கு இடமான விவாஹத்தைச் செய்துகொண்டாயே; இது என்னே? பெண்கள் யாவரும் படுக்கை வாய்ப்பை முந்துற விரும்புவர்கள்; *அஞ்சீதப்பைம் பூம்பள்ளியில் சயனிக்க விரும்புவர்கள்; 'நச்சுநாகணையானே' என்றும் 'நஞ்சரவில் துயிலமர்ந்த நம்பீ' என்றும் கூறப்படுகிறவனை நீ மணம் புணர்ந்தனையாதலால் விடநாகத்தின் மீதன்றோ நீ துயில்கொள்ளவேண்டிற்று.

அது கிடக்கட்டும்; நல்ல ரதத்தில் வீற்றிருந்து மெல்ல மெல்ல ஊர்வலம் வரவேணுமென்று பெண்கள் ஆசைப்படுவதுண்டு; அவ்வாசைக்கும் இடமில்லாதபடி புள்ளரையனை ஊர்தியாகக் கொண்டவனைப் பதியாக வரித்தாய்; புள்ளின்மீது ஒருவர் உட்காருவதே வருத்தம்; இருவராய்க் கூடி உட்கார அவகாசமே அரிது; நெருக்கி வீற்றிருந்தாலும் ஒரு நொடிபொழுதில் பலயோஜனை தூரம் பறந்து செல்ல வல்ல பறவை யாதலால் மந்தகதியாய் அழகிதாக ஊர்வலம் வருவதற்கு ஆசையில்லையே.

அதுதானும் கிடக்கட்டும்; நாயகன் நல்ல யுவாவாக இருந்து விட்டானாகில் மற்றைக் குறை நிறைகள் எப்படியிருந்தாலும் கணிசிக்கப்படாமலிருக்கலாம்; அதுதானும் இல்லையே; நீ வரித்த வரனுடைய ஜாதகமே கிடைப்பதரிது; அவன் பிறந்

தது எப்போதென்று கண்டறிய முடியவில்லை. பலநாளைக்கிழவன் என்று பலரும் பகர்கின்றனர்; அந்தோ! அன்னவனை வரித்தாயே! விவேகத்திற் சிறந்த நீ இப்படியும் செய்யலாமோ என்று ஏசுகின்றனராம். இந்த ஏசுதலால் என்ன தேறுகின்றதென்னில்; *மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன், என்றும் *அங்கைத் தலத்திடை யாழிகொண்டானவன் முகத்தன்றி விழியேனென்று செங்கச்சுக்கொண்டு கண்ணுடை யார்த்துச் சிறு மானிடவரைக் காணில் நாணும் கொங்கைத் தலமிவை நோக்காணீர்* என்றும் சொல்லு கிறபடியே திண்ணிய உறுதி கொண்ட ஆண்டாள் தன்னுடைய காதலை வகுத்த விஷயத்திலேயே செலுத்தினுள் என்னும் பெருமையே இந்தப் பரிஹாஸ மொழிகளால் பெறுவிக்கப்பட்டதாம்.

"நல்லவென்தோழி! நாகணை மிசை நம்பரர்" என்று ஆண்டாள் திருவாக்கில் வந்திருப்பதால் நாகேசய: என்றது பரத்வத்தையே காட்டும். "பறவையேறு பரம்புருடா", என்று ஆண்டாள் திருத் தகப்பனரது திருவாக்கில் வந்திருப்பதால் பக்ஷிரத: என்றதும் பரத்வத்தையே காட்டும். புருஷ: புராண: என்றது ஸ்வயமாகவே பரத்வத்தைக் காட்டுகின்றது. "மூவரில் முன்னிய விருத்தனை" என்றும். "தேவர்கட்கெல்லாம் விருத்தா!" என்றும் அருளிச் செயல்கள் காண்க.

[ஸமுசிதம் ப்ரணயம் ஸந்தர்சயந்தி] ஆண்டாளுடைய ப்ரேமம் ஸமுசித ஸ்தலத்தில்தான் நேர்பட்டது என்பதைப் பரிஹாஸ வியாஜத்தினுல் தோழிமார் தெரிவிக்கின்றனர் என்றதாயிற்று. (13)

த்வத்புக்தமால்யஸுரபீக்ருத சாருமௌலே: த்யக்த்வா புஜாந்தரகதாமபி வைஜயந்தீம்,
பத்யுஸ்தவேச்வரி! மிதஃ ப்ரதிகாதலோலா: பர்ஹாதபத்ர ருசிமாரசயந்தி ப்ருங்கா:. (14)

(அந்) ஹே ஈச்வரி ! ப்ருங்கா: த்வத் புக்தமால்ய ஸுரபீக்ருதசாருமௌலே: தவ பத்யு புஜாந்தரகதாம் வைஜயந்தீம் அபி த்யக்த்வா மித: ப்ரதிகாதலோலா: ஸந்த: பர்ஹாதபத்ரருசிம் ஆரசயந்தி.

எமக்குத் தலைவியான கோதையே! வண்டுகளானவை நீர் சூடிக்களைந்த மாலையினுலே சுறுமணம் கமழ்விக்கப்பட்ட அழகிய திருமுடியை யுடையனுன எம்பெருமானுடைய திருமார்பிலே விளங்காநின்ற வைஜயந்தி யென்னும் வனமாலையையும் விட்டு ஒன்ருேடொன்று நெருக்கித் தள்ளிக்கொண்டு திருமுடி மாலையிலே புக்கிருந்து மதுவுண்ண முயன்றும் அங்கு அவகாசம் பெருமல் ப்ரத்யாசையினுல் மேலே வட்டமிட்டுக்கொண்டு மயில் தோகையினுலான குடை பிடித்தாற் போன்ற சோபையை விளைத்தன.

ஆண்டாள் சூடிக்களைந்து கொடுத்த மாலையானது அப்ராக்ருதமான வநமாலையிற காட்டிலும் மிகச்சிறந்தது என்பதை ஒரு சமத்காரமாக அருளிச்செய்கிருர். "மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்தவண்டு இன்னிசைக்கும்" என்னுமாபோலே முடியின்மீது அணியும் மலர்களில் மதுவில் நசையாலே வண்டுகள் வந்து மொய்ப்பது இயல்பு. அப்படியே எம்பெருமானது திருமுடியின் மீதும் வண்டினங்கள் குழாங்கூடி முரல்கின்றன. திருமார்பிலே வநமாலை அணியப்பட்டிருந்தும் அங்கு ஒரு வண்டும் மொய்க்காமல் முடியின்மீதே மொய்க்கின்றமைக்கு யாது காரணமிருக்கும் என்று விமர்சிக்குமளவில், ஆண்டாள் சூடிக்

களைந்த சிறந்தமாலை இம்முடிமீதேயிருத்தலால் அதினுடைய போக்யதாதிசயத்திலே யீடுபட்டு அங்கே மொய்க்கின்றனவாகக் கொண்டு அருளிச்செய்கிறார்

"மிந: ப்ரதிகாதலோலா:" என்றதனுல் பல்லாயிரம் வண்டுகள் அங்குச் சென்றதாகவும் முந்துற முன்னம் சிலவண்டுகள் திருக்குழல் மாலையில் இடம் பெற்று விடவே மற்றவண்டுகள் தகர்ப்புண்டு, அகன்று அப்பால்போய்விடவும் மனமின்றியே மற்றொருகாலாகிலும் நமக்கு இங்கு இடம் கிடைக்குமோ என்னும் நசையினுல் அவ்விடத்திலேயே மேலே வட்டமிட்டுக் கொண்டிருக்கின்றதாகவும் தெரிவிக்கப்படுகிறது. குழல் மாலையில் இடம் பெருதகாலத்திலும் வைஜயந்தியில் வந்துசேர அவ்வண்டினங்களுக்கு மனமில்லாமையைக்காட்டும் முகத்தால் குழல்மாலையின் ஒப்புயர்வற்ற சிறப்பு காட்டப்பட்டதாயிற்று.

"புஜாந்தரகதாம் அபி" என்றதனுல் கண்ணுக்கு எளிதாகத் தென்படக்கூடியதான திருமார்பில் வநமாலை விளங்காநிற்கச் செய்தேயும் வண்டுகளின்மனம் அதிற் செல்லவில்லை யென்றும் திருக்குழல்மாலை அங்ஙனன்றிக்கே சிரமப்பட்டுக்காணக் கூடியதான இடத்திலிருக்கச் செய்தேயும் ஆகர்ஷண சக்தி அதுதன்னிலே விஞ்சியிருக்கின்றதென்றும் தெரிவித்தவாறு.

"பர்ஹாதபத்ரருசிம் ஆரசயந்தி" என்றதனுல் ஆண்டாளுடைய கடாக்ஷத்திற்கு இலக்கானவர்கள் "குடை நிழல் பொலிவர்தாமே" என்னலாம்படியான அரசுரிமையைப் பெறுவர் களென்று ஸூசிதமாயிற்று. ... ... ... (14

{ ஆமோதவத்யபி ஸதா ஹ்ருதயங்கமாபி ராகாந்விதாபி லலிதாபி குணோத்தராபி,
மௌலிஸ்ரஜா தவ முகுந்தகிரீடபாஜா கோதே! பவத்யதரிதா கலு வைஜயந்தி. } (15)

*(அந்)* ஹே! கோதே! வைஜயந்தீ ஆமோதவதீ அபி, ஸதா ஹ்ருதயங்கமா அபி, ராகாந்விதா அபி, லலிதா அபி, குணோத்தரா அபி, முகுந்த கிரீடபாஜா தவ மௌலிஸ்ரஜா அதரிதா கலு பவதி.

ஆண்டாளே! வைஜயந்தி யென்னும் வனமாலை சிறந்த பரிமளத்தோடு கூடியிருந்த போதிலும், எப்போதும் ஹ்ருதயங்கமமாகவே யிருந்த போதிலும், புஷ்பத்திற்கு இயற்கையாக இருக்கவேண்டிய நன்னிறம் குன்றாதிருந்த போதிலும், ஸௌகுமார்யம் குறையற்றிருந்த போதிலும், மற்றும் ஸகல குணஸம்பந்தமாயிருந்த போதிலும், எம்பெருமானது திருமுடியை யடைந்த உமது திருக்குழல் மாலையினுல் தாழ்வடைந்த தாகவன்றோ ஆயிற்று.

(கலு) என்கிற அவ்யயம் ப்ரஸித்தம் என்னும் பொருளைச் சொல்வதாதலால் வைஜயந்தியானது கீழ்ஸ்தானத்திலிருப்பது கொண்டும், ஆண்டாளுடைய திருக்குழல்மாலை மேல்ஸ்தானத்திலிருப்பது கொண்டுமே இவற்றின் தாரதம்யம் உலகமறிந்ததன்றோ; இதனை நாம் தனிப்பட நிரூபிக்க வேண்டுமோ? என்னும் திருவுள்ளம் விளங்கும்.

ஆண்டாளுடைய மாலைக்கும் வனமாலைக்கும் துல்யமாக இருக்கக் கூடிய [ஸாதாரணமான] பெருமைகளைப் பூர்வார்த்தத்தினுல் அருளிச் செய்து, ஆண்டாள் மாலைக்கு மாத்திரம் அஸாதாரணமாக அமைந்த இரண்டு பெருமைகளை மூன்றுவது பாதத்தில் அருளிச் செய்துள்ளார். [ஆமோதவதீ] நறுமண முடைத்தா

யிருத்தல் இரண்டுக்கும் துல்யம். [ஹ்ருதயங்கமா] வநமாலை ஹ்ருதய ப்ரதேசத்தை [திருமார்பை] அடைந்திருப்பது; ஆண்டாள் மாலை எம்பெருமானுக்கு மநோஹர மாயிருப்பது. [ஹ்ருதயங்கம சப்தம் ஹ்ருதயஹாரீ என்னும் அர்த்தத்தில் ப்ரஸித் தம்.] [ராகாந்விதா] வநமாலை சிவப்பு நிறத்தோடு கூடியிருப்பது. ஆண்டாள் மாலை சிவப்பு நிறத்தோடு கூட அநுராகத் தோடும் கூடியது. ஆண்டாளுடைய காதலே மாலையாக வடிவெடுத்த தென்று கருத்து. [லலிதா] ஸௌகுமார்யம் உபய ஸாதா ரணம். [குணோத்தரா] குணங்களால் சிறந்திருப்பது என்பது உபய ஸாதாரணம். புஷ் பம் தொடுக்கும் நாருக்கு குணமென்று பெயராதலால் ஆண்டாள் மாலையின் பக்ஷத் தில் அவ்வார்த்தமும் அநுஸந்தேயம். உபய ஸாதாரணங்களான அம்சங்களை முன் னிரண்டு பாதங்களால் சொல்லிற்றாயிற்று.

இனி மூன்றாவது பாதத்தால் ஆண்டாள் மாலைக்கு அஸாதாரணமாகச் சொல் லப்படுகிற ஏற்றமாவது "முகுந்த கிரீடபாஜா" என்கிற விசேஷணபதத்தினால் எம்பெரு மான் முடிமீது ஏறி யிருக்கப் பெறுகையாகிற ஏற்றமும், "தவ மௌலிஸ்ரஜா" என்கிற விசேஷ்யபதத்தினால் ஆண்டாள் சிரஸாவஹிக்கப் பெறுகையாகிற ஏற்றமுமாம்.

நைஷதகாவ்யத்தில் தமயந்தீ கேசபாசவர்ணநத்தில் "சிகுரப்ரகரா ஜயந்தி தே விதுஷீ மூர்த்நி ஸா பிபர்த்தி யாந், பசுபாப்யபுரஸ்க்ருதேந தந்துலநா மிச்சது சாமரேண க:" என் றொரு ச்லோகமுள்ளது. தமயந்தியின் கூந்தலுக்கு என்ன ஏற்றமென்றால் அவளு டைய சிரஸ்ஸின்மீது ஏறியிருக்கப் பெற்றிருப்பதுவே அதற்கு ஏற்றமன்றோ என்று சமத்காரமாக இதில் சொல்லப்படுகிறது. அது போல ஆண்டாளது திருக்குழலின் மீது ஏறப்பெறுவதே இம்மாலைக்கு ஒரு ஏற்றம் என்கிறது. ஆக திவ்ய தம்பதிகளின் சிரோ பூஷணமாயிருத்தலாகிற ஒப்புயர்வற்ற பெருமையைப் பெற்றது ஆண்டாள் கூந்தல்மாலை; வநமாலைக்கு இந்தப் பெருமை சிறிதுமில்லை; ஆமோதவத்த்வம் முத லிய வேறு சில பெருமைகள் இருந்தாலும் இவை ஆண்டாள் மாலைக்கும் உள்ளன வேயாதலால் ஸாதாரண தர்மங்களோடு அஸாதாரண தர்மங்களையும் பெற்றிருக் கின்ற ஆண்டாள் மாலையே சிறந்ததாகும்; இந்தச் சிறப்பை நாம் எடுத்துக் காட்ட வெண்டாதபடி இரண்டினுடையவும் இருப்பிடமே ஸ்பஷ்டமாகக் காட்டி விடுகிறது —என்றாராயிற்று.

ஏறக்குறைய ஒத்த தன்மைகளை யுடையவர்களான இரண்டு பெண்மணி களுக்குப் பரஸ்பரம் கலஹமுண்டாகி ஒருத்தியை மற்றொருத்தி கீழே தள்ளித் தோற் கடித்து மேம்பட்டு நின்று வெற்றி பெற்றதாக ஒரு விநோதக்கதை சொல்வதும் இந்த ச்லோகத்தில் தொனிக்கும். "ஆமோதவதீ" இத்யாதியாகச் சொல்லப்பட்ட குணங்கள் பெண்மணிக்கும் இருக்கத்தக்கவைகளே. ஆமோத மென்று (இப்போது) ஸந்தோஷத்தைச் சொல்லுகிறதாகவுங்கொள்ளலாம். [ஹ்ருதயங்கமா] காதலனுடைய நெஞ்சை விட்டுப் பிரியாதவள். [ராகாந்விதா] அநுராகத்தோடு கூடியவள். [லலிதா] ஒரு வகையான ச்ருங்கார சேஷ்டிதத்தை யுடையவள். ப்ருநேத்ராதிக்ரியாசாலிஸௌகுமார விதாநத:, ஹஸ்த பாதாங்கவிந்யாஸம் குர்வதீ லலிதா மதா* என்றதுங் காண்க. (குணோத்தரா) ஸௌந்தர்யம் லாவண்யம் முதலிய குணங்களால் சிறந்தவள்—இங்ஙனே ஆழ் பொருள்கள் ஆழ்ந்து உணரத்தக்கன. .... .... ... (15)

{ த்வந்மௌலிதாமநி விபோச்சிரஸா க்ருஹீதே ஸ்வச்சந்தகல்பித ஸபீதிரஸப்ரமோதா:,
மஞ்ஜுஸ்வநா மதுலிஹோ விதது: ஸ்வயம் தே ஸ்வாயம்வரம் கமபி மங்கலதூர்ய கோஷம். } (16)

(அந்) கோதே! விபோ: சிரஸா க்ருஹீதே த்வந்மௌலி தாமநி ஸ்வச்சந்தகல்பிதஸபீதிரஸப்ரமோதா: (அத ஏவ ) மஞ்ஜுஸ்வநா: மதுலிஹ: தே ஸ்வாயம்வரம் கமபி மங்கல தூர்யகோஷம் ஸ்வயம் விதது:.

ஆண்டாளே! எம்பெருமானது திருமுடியினுல் தாங்கப் பட்ட உமது சூந்தல் மாலையில் யதேஷ்டமாகக் கூடி மதுபானம் பண்ணிக் களித்தவைகளாய், செவிக்கினிய ரீங்காரத்தையுடையவைகளான வண்டுகளானவை உம்முடைய ஸ்வயம்வர மஹோத்ஸவத்திற்கு ஒரு விலக்ஷணமான மங்கள வாத்ய முழக்கத்தைச் செய்தன போலும்.

ஆண்டாளுடைய ஸ்வயம்வர மஹோத்ஸவத்திற்கு "மத்தளங் கொட்ட வரி சங்கம் நின்றூத" என்கிறபடியே லௌகிகவாத்ய கோஷம் தேவையில்லை; இவளது சூந்தல்மாலை எம்பெருமானது திருமுடியில் ஏறியிருக்கும் போது அம்மாலைதன்னில் வண்டினங்கள் வந்து படிந்து குழாங் குழாமாய் மதுவைப் பருகிக் களித்து முரல்கின்ற வொலிதானே மங்கள வாத்ய முழக்கமாக ஆயிற்றென்று உல்லேகித்தபடி.

இந்த ச்லோகத்தில் ஆண்டாளுடைய ஸ்வயம்வரமாகிற திருமணத்தின் ப்ரஸ்தாவம் வந்த போதே இதில் பிரயோகிக்கப் பட்டுள்ள சப்தங்கள் யாவும் மங்கல மயமாகவே அமைந்த அழகு நோக்கத்தக்கது உலகில் விவாஹகாலங்களில், பூச்சூடுதல், குழாங் கூடியுண்ணுதல், ஸந்தோஷ மநுபவித்தல்; மங்கல வொலி மல்குதல், இனிய உணவுகளை உட்கொள்ளுதல், மங்கல வாத்யங்கள் முழங்குதல் முதலியன நிகழ்வது முறைமை; இவை யத்தனையும் இந்த ச்லோகத்தில் சொல்தொடை நயத்தில் குறிக்கொள்ளத்தகும். முதல் பாதத்தில் பூச்சூடுதல் பேசப்பட்டது. ஸபீதி என்பதனுல் கூடியுண்ணுதல் கூறப்பட்டது. ப்ரமோத சப்தத்தினுல் ஸந்தோஷ மநுபவித்தல் தெரிவிக்கப்பட்டது. மஞ்ஜுஸ்வநா: என்பதனுல் மங்கல வொலி மல்குதல் மொழியப் பட்டது. மதுலிஹ: என்பதனுல் இனிய வுணவு அருந்துதல் அறையப் பட்டது ஈற்றடியினுல் மங்கல வாத்ய முழக்கம் தெரிவிக்கப்பட்டது.

இத்தகைய சொற்ருெடையழகு கவித்திறமையை நன்கு புலப்படுத்துகின்றது. (16)

{ விச்வாயமாநரஜஸா கமலேந நாபௌ வக்ஷஸ்தலே ச கமலாஸ்தநசந்தநேந,
ஆமோதிதோ'பி நிகமைர்விபுரங்க்ரியுக்மே தத்தே நதேந சிரஸா தவ மௌலிமாலாம். } (17)

(அந்) கோதே! விபு: நாபௌ விச்வாயமாநரஜஸா கமலேந ஆமோதிதோபி, வக்ஷஸ்ஸ்தலே கமலாஸ்தநசந்தநேந ஆமோதிதோபி அங்க்ரியுக்மே நிகமை: ஆமோதிதோபி (அத்ருப்தஸ்ஸந்) நதேந சிரஸா தவ மௌலிமாலாம் தத்தே.

கோதாய்! ஒவ்வொரு ரஜஸ்ஸும் ஒவ்வொரு உலகமாகப் பரிணமிக்கும்படியான பல ரஜஸ்ஸுக்கள் பொருந்திய தாமரைப் பூவினுல் திருநாபியிலும், பெரிய பிராட்டியாருடைய திருமுலைத் தடத்துக் கலவைச் சாந்தினுல் திருமார்பிலும், வேதங்களினுல் திருவடியிணையிலும் எம்பெருமான் நறுமணம் கொண்டிருக்கச் செய்தேயும் (இப்பரிமளங்களினுல் த்ருப்திபெருதவனுய்) உம்முடைய சூந்தல் மாலையை முடிவணங்கி ஏற்றுக் கொள்ளுகிருன்.

எம்பெருமான் உபநிஷத்துக்களில் 'ஸர்வகந்த:' என்று ப்ரஸித்தி பெற்றிருக்கின்றான்; அதற்குமேல் "கொப்பூழிலெழு கமலப் பூவழகர்" என்கிறபடியே திருநாபியில் தாமரைப் பூவினால் பரிமளம்; "ஸ்ரீஸ்தநகஸ்தூரீமுத்ரிதோரஸ:" என்றும் "ஸ்ரீஸ்தநகஸ்தூரீமகரீமுத்ரிதோரஸ:" என்றும் சொல்லுகிறபடியே பெரிய பிராட்டியாருடைய திருமுலைச் சாந்தினால் திருமார்பில் பரிமளம்; "யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ வகுளாமோதவாஸிதம்" என்று யதிராஜ ஸப்ததியில் அருளிச்செய்தபடியே பெரிய மகிழ் மாலையின் நறுமணம் மிக்க திருவாய் மொழியினால் திருவடியில் பரிமளம்; ஆக இவ்வளவு பரிமள ப்ராசுர்யம் நிரம்பியிருக்கச் செய்தேயும் எம்பெருமான் இப்பரிமளங்களெல்லாவற்றினும் சிறந்ததோர் விலக்ஷணபரிமளம் பெறத்திருவுள்ளமாய் ஆண்டாளுடைய கூந்தல் மாலையைத் தலையாலிரந்து பெற்றுத் தரித்தருளுகிறான்—என்றவிதனால் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் முடி மாலையினது நறுமணம் ஒப்புயர்வற்றது என்பது தெரிவிக்கப்பட்டதாயிற்று.

மூன்றாவது பாதத்தில் நிகமை:என்றது த்ராவிட வேதத்தையே திருவுள்ளம் பற்றியதாயிருக்கத் தகுதியுடையது: "திருவடிமேலுரைத்த தமிழ் ஆயிரத்துள்" என்றதைத் திருவுள்ளம் பற்றியே (அங்க்ரியுக்மே) என்றார். "யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ வகுளாமோதவாஸிதம், ச்ருதீநாம் விச்ராமாயாலம் சடாரிம் தமுபாஸ்மஹே." என்ற யதிராஜ ஸப்ததி திவ்ய ஸூக்தியினால் திருவாய் மொழியில் பரிமளப்ராசுர்யம் அருளிச் செய்யப்பட்டிருப்பதனால் "நிகமைராமோதித:" என்றது அதற்குப்போரப் பொருந்தியிருக்கும்.

(விச்வாயமாநரஜஸா) தாமரைப் பூவில் துகள் இருப்பது ஸஹஜமாதலால் திருநாபிக் கமலத்திலும் துகள் இருப்பதாகப் பேசப்பட்டது. அக்கமலம் ஸகல லோக ஸ்ருஷ்டிக்கும் காரண பூதமாதலால் ஒவ்வொரு உலகமாகப் பரிணமிக்குமென்று சமத்காரமாக அருளிச் செய்தபடி. ... ... ... (17)

{ சூடாபதேந பரிக்ருஹ்ய தவோத்தரீயம் மாலாமபி த்வதலகைரதிவாஸ்ய தத்தாம்,
ப்ராயேண ரங்கபதிரேஷ பிபர்த்தி கோதே ஸௌபாக்ய ஸம்பதபிஷேகமஹாதிகாரம். } (18)

(அ) கோதே! ஏஷ ரங்கபதி: தவ உத்தரீயம், த்வதலகை: அதிவாஸ்ய தத்தாம் மாலாம் அபி சூடாபதேந பரிக்ருஹ்ய ஸௌபாக்ய ஸம்பதபிஷேகமஹாதிகாரம் ப்ராயேண பிபர்த்தி.

கோதாய்! இந்த அழகியமணவாளப் பெருமாள் உம்முடைய மேலாடையையும், உமது கூந்தல்களினால் நறுமண மூட்டப்பட்டுப் பிறகு ஸமர்ப்பிக்கப் பட்ட பூமாலையையும் திருமுடியினால் ஏற்றுக்கொண்டு ஸௌபாக்கியமாகிற செல்வத்தில் அபிஷிக்தராகைக்கீடான தகுதியைப் பெறுகின்றார் போலும்.

எம்பெருமானுடைய ஸம்பந்த லேசத்தினால் மற்றையோர்க்கும் ஸௌபாக்யம் உண்டாவதாயிருக்க, ஆண்டாளுடைய மேலாடையையும் திருக்குழல் மாலையையும் சிரஸா வஹிப்பதனால்தான் எம்பெருமானுக்கு ஸௌபாக்யம் ப்ரஸக்தமாகிறதென்று பேசினவிது, எம்பெருமானுடைய திருவுள்ளக் கருத்தை அடியொற்றியதாகும். ஆண்டாளுடைய ப்ரஸாத ஸம்பந்த நிபந்தனமாகவே எம்பெருமான் தனக்கு ஸௌபாக்ய முண்டாவதாக அபிமானிக்கிறானென்பது எங்ஙனே தெரிகிற தென்

னில், அந்த ப்ரஸாதத்தில் நாளைக்கும் அவன் காட்டியருளும் ஆதராதிசயத்தினால் தெரிகிறதென்றுணர்க.

ஆண்டாளுடைய திருக்குழல் மாலையைப் போலவே அவளது மேலாடையையும் எம்பெருமான் விரும்பித்தன் திருமுடிமீது ஏற்றுக்கொள்வது பிரசித்தம். (இவ்விஷயம் இந்த ஸ்துதியில் இந்த ச்லோகமொன்றில் மாத்திரமே அருளிச்செய்யப்பட்டது.)

ப்ராயேண என்பது உத்ப்ரேக்ஷாலிங்கம். .. ... ... (18)

துங்கைரக்ருத்ரிமகிர: ஸ்வயமுத்தமாங்கை: யம் ஸர்வகந்த இதி ஸாதரமுத்வஹந்தி,
அமோதமந்யமதிகச்சதி மாலிகாபி: ஸோபி த்வதீயகுடிலாலகவாஸிதாபி:. (19)

(அந்) ஹே கோதே! அக்ருத்ரிமகிர: துங்கை: உத்தமாங்கை: யம் ஸர்வகந்த: இதி ஸாதரம் உத்வஹந்தி, ஸ: (பகவாந்) அபி த்வதிய குடில அலக வாஸிதாபி: மாலிகாபி: அந்யம் ஆமோதம் அதிகச்சதி.

கோதாய்! வேதங்களானவை (தமது) உயர்ந்த சிரசுகளினால் யாவனொரு எம்பெருமானை ஸர்வகந்தனென்று கொண்டு ஆதரத்தோடு வஹிக்கின்றனவோ, அந்த எம்பெருமானும் உம்முடைய குடிலமான கூந்தலில் நறுமணம் கமழ்விக்கப்பட்ட மாலைகளாலே விலக்ஷணமானதொரு பரிமளத்தை அடைகின்றான்.

சாந்தோக்யோபநிஷத்தில் (3-14-4) "ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ: ஸர்வமிதமப்யாத்த: அவாக்யநாதர:"என்கிற வாக்யத்தில் எம்பெருமான் ஸர்வகந்தனாக ஓதப்பட்டிரா நின்றான்; ஸகல விதமான நறுமணமும் எம்பெருமானிடத்திலுள்ளதாகக் கூறியவாறு. இங்ஙனே இயற்கையாகவே ஸகல ஸுகந்தங்களுக்கும் எம்பெருமான் கொள்கலமாக இருந்து வைத்தும் ஆண்டாள் சூடிக்களைந்த பூமாலையைத் தான் சூடி விலக்ஷணமான பரிமளத்தை யடைகின்றானும். ஆமோதம் என்னும் வடசொல்லுக்குப் பரிமளம் என்கிற பொருள் போலவே ஸந்தோஷம் என்கிற பொருளுமுளதாதலால் கோதை சூடிக்களைந்த மாலையைச் சூடி எம்பெருமான் விலக்ஷணமான திருவுள்ளவுகப்பைப் பெறுகின்றானென்றதாயிற்று.

'எம்பெருமான் வேதாந்த ப்ரதிபாத்யன்' என்பதை 'வேதங்களும் எம்பெருமானைத் தலையில் சுமக்கின்றன' என்று கூறியவிது சொற் சமத்காரம். வேதங்களின் மௌலியை ஸ்வஸம்பந்தத்தாலே ஸுகந்தப்படுத்தாநின்ற எம்பெருமான் தானும் தனது மௌலியை ஸுகந்தப்படுத்த ஆண்டாளுடைய திருக்குழல் மாலையை விரும்புகின்றானென்று அணிவிளங்க அருளிச் செய்தாராயிற்று.

• [அக்ருத்ரிமகிர:]நம் போன்றபுருஷர்களால் இயற்றப்பட்டவைகள் (க்ருத்ரிமகிர:) எனப்படும். அங்ஙனல்லாதவை அக்ருத்ரிமங்கள்; அபௌருஷேயங்களான வேதங்களென்றபடி. உத்தமாங்கமென்று வேதாந்தபாகமான உபநிஷத்துக்களைச் சொன்னபடி. துங்கை: என்ற விசேஷணம் வேதாந்தத்தின் சிறப்பை விளக்கும்.

(குடிலாலக...) கூந்தலுக்குக் குடிலத்வம் சிறப்பாக வருணிக்கப்படுவது இயல்பு. பகவத் த்யாந ஸோபாநத்தில் "குப்யச்சோலீவசநகுடிலை:" என்று இவ்வாசிரியர் தாமே அருளிச்செய்ததும் இங்கு ஸமரிக்கத் தக்கது. .... .... (19)

தந்யே ஸமஸ்தஜகதாம் பிதுருத்தமாங்கே த்வந்மௌலிமால்ய பரஸம்பரணேந பூய:,
இந்திவரஸ்ரஜமிவாதததி த்வதீயாந்யாகேகராணி பஹுமாந விலோகிதாநி. (20)

(அந்) ஹே கோதே! த்வந்மௌலிமால்யபரஸம்பரணேந தந்யே ஸமஸ்தஜகதாம்பிது: உத்தமாங்கே த்வதீயாநி ஆகேகராணி பஹுமாநவிலோகிதாநி, பூய: இந்திவரஸ்ரஜம் ஆதததீவ.

கோதாய்! உம்முடைய கனத்த தான கூந்தல் மாலையை அணிந்து கொள்வதனுல் க்ருதார்த்தமாயிருக்கின்ற, எவ்வுலகுக்கும் தந்தையான எம்பெருமானது திருமுடியில் நீர் மிக்க ஆதரவோடு செய்யும் கடாக்ஷ வீக்ஷணங்களானவை கருநெய்தல் மாலை சாத்தினுற்போன்ற அழகையும் அளிக்கின்றன.

ஆண்டாள் எம்பெருமானுடைய திருமேனியெல்லாம் கிடக்க, திருமுடியையே ஆவலோடு உற்று நோக்குகின்ருளாம்; எதனுலென்னில்; நாம் சூடிக்களைந்த மாலையை எம்பெருமான் இவ்வளவு ஆதரத்தோடு அணிந்துகொண்டிருக்கின்ருனே! என்கிற உவப்பின் மிகுதியாலாம். இவள்தான் குவளையங் கண்ணியாதலால், குவளை மலரின் காந்திபோன்ற காந்தியே கடாக்ஷ வீக்ஷணவழியாக எம்பெருமானது திருமுடியின்மீது ப்ரஸரிக்கின்றது. ஆகவே, ஏற்கெனவே ஆண்டாள் சூடிக்களைந்து தந்த கலம்பகன் மாலையை அணிந்திருப்பது தவிர, கருநெய்தல் மாலையையும் அணிந்திருப்பது போல் எப்பெருமான் திருமுடி விளங்குகின்றது என்று வருணித்தாராயிற்று.

தத்வமுக்தாகலாபத்தின் மங்கள ச்லோகமாகிய "லக்ஷ்மீ நேத்ரோத்பலஸ்ரீ" என்கிற சுலோகம் இங்கு ஒருபுடை நினைக்கத் தக்கது. பூய: என்பது பூர்வார்த்தத்திலும் அந்வயிக்கலாம், உத்தரார்த்தத்திலும் அந்வயிக்கலாம். எம்பெருமானுடைய திருமுடி தன்யமாயிருக்கச் செய்தேயும் ஆண்டாளுடைய திருக்குழல் மாலையை அணிந்ததனுல் பின்னையும் தன்யமாயிற்று என்பது முந்தின அந்வயத்தினுல் கிடைப்பதாகும். எம்பெருமானுடைய திருமுடி ஆண்டாளுடைய திருக்குழல் மாலையை மாத்திரமன்றிக்கே திருக்கண் மாலையையும் அணிந்து விளங்குகின்றதென்பது பிந்தின அந்வயத்தால் கிடைப்பதாகும்

(ஆகேகராணி) பெண்டிர்களின் இயற்கைக்கு ஏற்றவாறு முழு நோக்காக வன்றிக்கே அரைக்கண் பார்வையானபடி. (20)

ரங்கேச்வரஸ்ய தவ ச ப்ரணயாநுபந்தாத் அந்யோந்யமால்ய பரிவ்ருத்திமபிஷ்டுவந்த:,
வாசாலயந்தி வஸுதே ரஸிகாஸ்த்ரிலோகீம் ந்யூநாதிகத்வ ஸமதாவிஷயைர் விவாதை:. (21)

(அந்) வஸுதே (கோதே!) ரங்கேச்வரஸ்ய தவ ச ப்ரணயாநுபந்தாத் (ஸம்பூதாம்) அந்யோந்யமால்யபரிவ்ருத்திம் அபிஷ்டுவந்த: ரஸிகா: ந்யூநாதிகத்வஸமதாவிஷயை: விவாதை: த்ரிலோகீம் வாசாலயந்தி.

பூமிப் பிராட்டியின் அம்சமான ஆண்டாளே! ரங்கமன்னூர்க்கும் உமக்கும் காதல் வசமாக நேர்ந்த மாலைமாற்றுதலைப் புகழ்கின்ற ரஸிகர்கள் தாழ்த்திச் சொல்வதும் உயர்த்திச் சொல்வதும் ஒக்கச் சொல்வதுமான விவித வாத வசனங்களினுல் மூவுலகையும் பெரு முழக்கங் கொண்டதாகச் செய்கின்றனர்.

விவாஹ காலங்களில் தம்பதிகளுக்கு மாலை மாற்றுதல் நடைபெறும் முறைமையின்படியே ஆண்டாளுடைய திருக்கல்யாணத்திலும் நடைபெறக் குறையில்

லேயே, அக்காலத்தில் குழாங்கூடிக் கண்டுகளிக்கப் பலர் திரள்வர்களே. அந்தத்திரளில் ரஸிகரா யிருப்பார் வாளா விருக்க கில்லாமல் தம்தம் நெஞ்சில் தோற்றிய வாறு சொல்லுவர்கள், இராமனுக்கும் ஸீதைக்கும் திருமணம் நடந்த காலத்தில் "நம்பியைக்காண நங்கைக்கு ஆயிர நயனம் வேண்டும்" என்று சிலர் கூறினதாகவும் "கொம்பினைக்காணுந்தோறும் குரிசிற்கு மன்னதேயாம்" என்று சிலர் கூறின தாகவும் கம்பர் பேசினரன்றே. அப்படியே இங்கும் எம்பெருமானைத் தாழ்த்தி ஆண்டாளை உயர்த்திப் பேசுவாரும், ஆண்டாளைத் தாழ்த்தி எம்பெருமானை உயர்த்திப் பேசுவாரும், இருவரும் ஏற்றத் தாழ்வின்றியே ஸமமாகவே விளங்குகின்றனர் என்று பேசுவாருமாய் இங்ஙனே பேச்சுக்கள் அதிகரித்துப் பேரொலியுண்டாயிற்று என்கிறார்.

எம்பெருமானையும் பிராட்டியையும் அநுபவிக்கின்ற ஆசாரியர்கள் மேற் குறித்த மூவகையான பேச்சுக்களையும் தமது திவ்யக்ரந்தங்களிற் பேசியுள்ளார்கள். எம்பெருமானுக்கு சேஷித்வமும், பிராட்டிக்கு சேஷத்வமும், அப்படியே எம்பெருமானுக்கு ஸகல ஜகத்பதித்வ ப்ரயுக்தமான ஏற்றமும், பிராட்டிக்கு பத்நீத்வ ப்ரயுக்தமான தாழ்வும் அபலபிக்க வொண்ணாதவை. ஆகவிப்படி சாஸத்ரீயமான ஏற்றத்தாழ்வு இருக்கச் செய்தேயும், ஒரு அபிமாந விசேஷத்தினால் "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" என்று எம்பெருமானும் சொல்லிவைத்த கணக்கிலே, பிராட்டியை உயர்த்தியும் எம்பெருமானைத் தாழ்த்தியும், இருவரையும் ஸமதுலையிலே வைத்தும் ஆசார்யர்கள் ரஸமயமாக அருளிச் செய்வதுண்டு.

பட்டர் ஸ்ரீ குணரத்நகோசத்தில் "ச்ரியம் த்வந்நோப்யுச்சை: வயமிஹ பணும:", "தவ ஸ்பர்சாதீசம் ஸ்ப்ருசதி கமலே மங்களபதம்" என்றும் அருளிச் செய்தவை ப்ரஸித்தம். எம்பெருமானும் மோக்ஷோபாயம், பிராட்டியும் மோக்ஷோபாயம் என்று ஸமமாகச் சிலர் சொல்லுவதும் ப்ரஸித்தம். இப்புடைகளிலே ஆண்டாள் திருக்கல்யாணத்திலும் ரஸிகர்களுள் பிரியமான பேச்சு பலவிதமாக நிகழ்கின்றதாம். 'இப்பெருமானுக்கு எங்களுடைய ஆண்டாள் தேவியாக வாய்க்காவிடில் இவனுடைய புருஷோத்தமத்வம் காசுக்கு உதவுமோ? என்று பெண் வகுப்பினர் பேசுவர்; உங்களுடைய ஆண்டாளுக்கு எங்கள் பெருமான் மணவாளனாக வாய்க்காவிடில் "கோங்கலரும் பொழில் மாலிருஞ் சோலையிற் கொன்றைகள் மேல் தூங்கு பொன் மாலைகளோடுடனாய் நின்று தூங்குகின்றேன்" என்று இவள் தானே சொல்லிக் கொண்டபடி இவள் உபயோக மற்றவளாக ஆய்விடுவளன்றோ' என்று பேசுவர் மணமகன் வகுப்பினர். இரு வகுப்பிலுஞ் சேராத தடஸ்தர்கள் 'ஏற்றத் தாழ்வு பேசுவதில் நமக்கென்ன போக்கியதை, என்று கொண்டு இருவரையும் பற்றி ஸமமாகப் புகழ்ந்து பேசுவர்கள். ஆனால் ஸமமாகப் பேசுகிற வார்த்தை எடுபடாது. ஏற்றத் தாழ்வான வார்த்தையில் கக்ஷிப்ரதிகக்ஷிகள் மலிந்து பெரிய இரைச்சலாக ஆய்விடும். அது (த்ரிலோகீம் வாசாலயந்தீ) என்பதனால் காட்டப்பட்டது.

தம்பதிகளுள் ஒரு வ்யக்தியினிடத்திலும் சிறிதும் விரோத மின்றியே இவை விநோத வார்த்தைகளே என்பதை ரஸிகா: என்ற அழகிய சொல்லால் ஸூசிப்பித்தருளினர். ... .... ... ... ... (21)

{ தூர்வாதலப்ரதிமயா தவ தேஹகாந்த்யா கோரோசநாருசிரயா ச ருசேந்திராயா:,
{ ஆஸீத நுஜ்ஜிதசிகாவலகண்டசோபம மாங்கல்யதம் ப்ரணமதாம் மதுவைரிகாத்ரம். } (22)

(அந்) ஹே கோதே! ப்ரணமதாம் மாங்கள்யதம் மதுவைரிகாத்ரம் தூர்வாதலப்ரதிமயா தவ தேஹகாந்த்யா, கோரோசநாருசிரயா இந்திராயா: ருசா ச அநுஜ்ஜிதசிகாவள கண்ட சோபம் ஆஸீத்

கோதாய்! தன்னைத் தொழுமவர்களுக்கு நன்மைகளை நல்குமதான எம்பெருமான் திருமேனியானது அறுகம்புல்லோடொத்த உமது திருமேனி யொளியாலும் கோரோசனம் போன்றழகியதான ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் (திருமேனி) ஒளியாலும் மயிற் கழுத்தினழகு இடைவிடாது பொருந்தியிருக்கப் பெற்றதாயிற்று.

பெரிய பிராட்டியார் எம்பெருமானை இறைப்பொழுதும் விட்டகலாதிருப்பது போலவே ஆண்டாளும் இருக்கின்றமையை ஒரு சமத்காரமாக அருளிச் செய்தாராயிற்று.

"திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ" என்கிற படியே எம்பெருமானுடைய இருபுறங்களிலும் ஸ்ரீதேவி பூதேவிகள் எழுந்தருளியிருப்பது ப்ரஸித்தம். ஆண்டாள் பூதேவியின் அம்சமாதலால் இவளே பூதேவியாக அத்யவஸிக்கப்படுகிறாள். அல்லது, தனியாயும் ஆண்டாள் எழுந்தருளி யிருப்பதுண்டாதலால் அந்த ஸந்நிவேசத்தைத் திருவுள்ளம் பற்றி அருளிச் செய்கிறபடியுமாகலாம். பூமிப் பிராட்டியின் திருநிறமே ஆண்டாளுடைய திருமேனி நிறமாக இங்குக் கூறப்பட்டது. அதாவது அறுகம்புல்லின் நிறமாகும். ஸ்ரீமஹாலக்ஷ்மியின் நிறம் கோரோசனத்தின் நிறம் போன்றது. எம்பெருமானுடைய திருமேனியோ "முகிலுருவ மெம்மடிகளுருவந்தானே" என்கிறபடியே கருமுகில் போல்வதோர் மேனியாகும். பரஸ்பரம் பரபாகங்களான இம் மூன்று நிறங்களும் தம்மிலே சேர்ந்து சித்திர வர்ணமாக விளங்குவது ஸம்பாவிதமாதலால் "மதுவைரிகாத்ரம் அநுஜ்ஜிதசிகாவள கண்ட சோபம் ஆஸீத்" என்கிறார். இரண்டு பக்கங்களில் நின்றும் ஒரோவகையான வொளி வீசப் பெற்ற பகவத் திவ்ய மங்கள விக்ரஹமானது மயில்கழுத்துச் சாயலாக விளங்கும் படியை அருளிச் செய்தாராயிற்று.

"அநுஜ்ஜித சிகாவளகண்ட சோபமான மதுவைரிகாத்ர மானது மாங்கள்யதமாக ஆயிற்று" என்று உத்தேச்ய விதேயங்களை மாறடிச் சிலர் வியாக்கியானிப்பது ஆசிரியரின் விவக்ஷைக்குப் பொருந்தியிருக்குமா வென்பதை ரஸிகர்கள் விமர்சிப்பது. (22)

{ அர்ச்யம் ஸமர்ச்ய நியமைர் நிகமப்ரஸூநை: நாத த்வயா கமலயா ச ஸமேதிவாம்ஸம்,
{ மாதச்சிரம் நிரவிசந் நிஜமாதிராஜ்யம் மாந்யா மநுப்ரப்ருதயோபி மஹீக்ஷிதஸ்தே. } (23)

(அந்) மாத: (கோதே!) மாந்யா: மநுப்ரப்ருதய: தே மஹீக்ஷித: அபி த்வயா கமலயா ச ஸமேயிவாம்ஸம் அர்ச்யம் நாதம் நியமை: நிகமப்ரஸூநை: ஸமர்ச்ய நிஜம் ஆதிராஜ்யம் சிரம் நிரவிசந்.

தாயே! கோதாய்! கொண்டாடத்தகுந்தவர்களான அந்த மநுப்ரப்ருதிகளான மஹாராஜர்களும் உம்மோடும் பெரிய பிராட்டியாரோடும் கூடியிருந்துள்ள பூஜ்ய

ரான உமது நாதரை நியமங்களோடுகூடிய வேதபுஷ்பங்களினால் ஆராதித்துத் தங்களுடைய ஸாம்ராஜ்யத்தை நீடுழிகாலம் அநுபவித்து மகிழ்ந்தனர்.

பூதத்தாழ்வார் தம்முடைய திருவந்தாதியில்—"கோவாகி மாநிலங்காத்து நங்கண் முகப்பே யாவேகிச் செல்கின்ற மன்னவரும் பூமேவும் செங்கமலநாபியான் சேவடிக்கே யேழ்பிறப்பும் தண்கமலமேய்ந்தார்தமர்" என்றருளிச் செய்தார். உலகில் மஹா ராஜா திராஜர்களா யிருப்பவர்களெல்லாரும் நெடுங்காலம் எம்பெருமானை ஆராதித்தே அதன் பயனாக ஆதிராஜ்யம் பெற்றார்களென்று அந்தப் பாசுரத்திற் கூறப்பட்டது. வெறும் எம்பெருமானை மாத்திரம் ஆராதித்து அது பெற்றார்களல்லர்; பெரிய பிராட்டியாரோடும் ஆண்டாளோடும் கூடிய எம்பெருமானை ஆராதித்தே அது பெற்றார்களென்று இந்த ச்லோகத்தில் அருளிச்செய்யப்படுகின்றது.

ஆண்டாள் பெரியாழ்வாருடைய திருமகள்தானே; இவள் பிற்காலத்தவளாயிருக்க மநுமுதலான சக்ரவர்த்திகளும் இவளோடுகூடிய எம்பெருமானை ஆராதித்தார்களென்கை பொருந்துமோவென்று சங்கிக்கவேண்டா; முதல்ச்லோகத்தில் "ஸாக்ஷாத் க்ஷமாம்" என்றருளிச்செய்தபடி பூமிப்பிராட்டியையே சொல்லிற்றாகிறது. (23)

{ ஆர்த்ராபராதிநி ஜநே'ப்யபிரக்ஷணார்த்தம் ரங்கேச்வரஸ்ய ரமயா விநிவேத்யமாநே,
பார்ச்வே பரத்ர பவதீ யதி தத்ர ந ஸ்யாத் ப்ராயேண தேவி வதநம் பரிவர்த்திதம் ஸ்யாத். } (24)

(அந்) (கோதே!) ஆர்த்ராபராதிநி அபி ஜநே அபிரக்ஷணார்த்தம் ரமயா ரங்கேச்வரஸ்ய விநிவேத்யமாநே ஸதி, தத்ர பரத்ர பார்ச்வே பவதீ ந ஸ்யாத் யதி, (ரங்கேச்வரஸ்ய) வதநம் ப்ராயேண பரிவர்த்திதம் ஸ்யாத்.

புதிதுபுதிதாகக் குற்றங்களைச் செய்துகொண்டே யிருக்கின்ற சேதநர் திறத்திலும் கைவிடுதலின்றிக்கே ஸம்ரக்ஷணமே செய்தருளவேணுமென்று பெரியபிராட்டியார் ஸ்ரீரங்கநாதனுக்குத் தெரிவிக்குமளவில், அங்கு மற்றொருபக்கத்தில் ஆண்டாளே! தேவரீர் இல்லாமலிருக்குமாகில், பிராட்டியின் புருஷகாரத்திலே ஸ்ரீரங்கநாதன் வைமுக்யத்தைக் காட்டித் தன் திருமுகத்தைத் திருப்பியே யிருப்பர்.

பேரருள்பொலிந்த பரமபுருஷன் குற்றவாளர்களான சேதநர்களையும் காத்தருள்வதில் இயற்கையாகவே குதூஹலமுடையவன். ஆனாலும் சில ஸமயங்களில் சேதநர்களின் குற்றங்களைக் கணிசியாமலோ க்ஷமித்தோ போக்யமாகக் கொண்டோ அநுக்ரஹிக்கவும் அக்குற்றங்களைக் கணக்கிட்டு நிக்ரஹிக்கவும் அப்பெருமானுக்கு ஸ்வாதந்திரியமுண்டு. அதனால் அவர்களைத் தண்டிக்கவும் திருவுள்ளம்பற்றக் கூடும். அப்படிப்பட்ட ஸமயங்களில், ஒருகாலும் நிக்ரஹித்தறியாத பெரியபிராட்டியார் எம்பெருமானளவிலே சில உத்போதநங்கள் செய்ய ஒருப்படுவதுண்டு; "நாதனே! மணற்சோற்றிலே கல் ஆராய்வது முண்டோ? குற்றமே வடிவெடுத்த இவர்கள் பக்கலிலே நற்றம் தேடுவதும், அஃதில்லையென்று கைவிடப் பார்ப்பதும் தகுதியோ? திரக்கழிய அபராதங்கள் செய்தவர்களாயிருந்தாலும் பிறகு சிறிது அநுதாபங்கொண்டு கவிழ் தலையிட்டுத் திருவடி வாரத்திலே வந்து நிற்பவர்கள் விஷயத்திலும் தேவரீர் நிக்ரஹமே காட்டுவதானால், பின்னை அநுக்ரஹத்திற்கு இலக்கு ஏது? இப்படிப்பட்டவர்கள் விஷயத்திலன்றோ நானும் புருஷகாரம் செய்வது. குற்றங்களைச் செய்தும் அநுதாப லேசமு மின்றிக்கே விமுகர்களாகவே

யிருக்கும் சேதநர் திறத்திலே தேவரீருடைய ஸ்வாதந்திரியம் ஜீவிக்கலாமே; ஸ்வல்பம் ஆபிமுக்யம் உடையவர்களான இப்படிப்பட்டவர்களை தேவரீர் காத்தருள்வது அவர்ஜநீயமே யாகும்'' என்பது பிராட்டியின் உத்போதந ப்ரகாரம்.

இங்ஙனே பிராட்டி அருளிச்செய்வது கேட்கு மெம்பெருமான் எப்போதும் இவளுக்கு இங்ஙனே சொல்லுவது தான் தொழில்; இவள் சொற்படி கேட்போமாகில் சாஸ்த்ரங்களுக்கும் நம்முடைய ப்ரபுத்வத்திற்கும் ஜலாஞ்ஜலியேயாகவேணும்; ஆதலால் இவளுடைய சொற்களுக்கு நாம் செவிகொடுப்பதுவே வேண்டா' என்றெண்ணி முகத்தை மாறவைக்கப் பார்ப்பன்; பிராட்டியெழுந்தருளி யிருக்கிற பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திலே முகத்தைத் திருப்ப நினைக்குமளவில், அந்தப்பக்கம் ஆண்டாள் எழுந்தருளியிருக்குமிட மாதலால் முகத்தை அந்தப்பக்கமாகத்திருப்புதல் அஸாத்யமாகின்றது. ஏனென்றால், சேதநர்விஷயமாக எம்பெருமானிடத்திலே ஆண்டாள் செய்தருளும் உத்போதநம் பெரியபிராட்டியாருடைய உத்போதநத்திற்கு மேற்பட்டிருக்குமேயன்றிக் குறைந்திராது. ஆகவே இந்தப் பக்கமாக முகத்தைத் திருப்பியும் எம்பெருமானுக்கு ஸ்வாபீஷ்டம் நிறைவேற வழியில்லையாகும்; தேளுக்கு அஞ்சி மீண்டு புலியின் வாயில் விழுவதுபோலே, **திருமகளின் உபதேசங்களைப்** பேணமல் முகத்தைத் திருப்புவதனால் பயனில்லையே; கோதையின் உபதேசங்களிலே காதுகொடுக்கவேண்டு மித்தனையே. இஃதறிந்த எம்பெருமான் "பாயாதீஷத் ப்ரசலிதபதேர் நாபகச்சந் ந திஷ்டந் மித்யாகோபஸ் ஸபதி நயநே மீலயந் விச்வகோப்தா" (கோபால விம்சதி) என்றாப்போலே தணற வேண்டிய தாகின்றது; 'பிராட்டியின் சொற்படி நடப்பதே நமக்குக் கதி' என்று அறுதியிட வேண்டியதாகவு மாகின்றது.

இதனால், புருஷகாரத்வைகாந்திகமான கருணாதிசயத்தில் ஆண்டாள் பெரிய பிராட்டியாரையும் வென்றிருக்கின்றாளென்பது பெறப்படும்.

ஜநே என்கிற ஸப்தமியை விஷயஸப்தமியாகவுங் கொள்ளலாம்; ஸதிஸப்தமியாகவுங் கொள்ளலாம். ப்ராயேண என்பது உத்ப்ரேக்ஷாலிங்கம். ... (24)

கோதே குணைரபநயந் ப்ரணதாபராதாந் ப்ருக்ஷேப ஏவ தவ போகரஸாநுகூல:,
கர்மாநுபத்தபலதாநரதஸ்ய பர்த்து: ஸ்வாதந்த்ர்யதுர்வ்யஸநமர்மபிதாநிதாநம். (25)

(அந்) கோதே! ப்ரணதாந் குணை: அபநயந் போகரஸாநுகூல: தவ ப்ருக்ஷேப ஏவ கர்மாநுபத்தபலதாநரதஸ்ய பர்த்து: ஸ்வாதந்த்ர்யதுர்வ்யஸநமர்மபிதாநிதாநம் பவதி.

கோதாய்! ஆச்ரிதசேதநர்களின் அபராதங்களை விலாஸ சேஷ்டிதங்களினால் இல்லைசெய்யுமதாயும், ச்ருங்கார ரஸாநுபவ ஸாமக்ரிகளிலே ஒன்றாயுமிருக்கிற தேவரீருடைய புருவ நெறிப்பே கர்மாநுகுணமாகப் பலன்கொடுக்க விரும்புகின்ற எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்யவ்யஸநமாகிற மர்மஸ்தானத்தைக் கண்டிப்பதில் மூலகாரணமாகின்றது. [வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்] என்ற ப்ரஹ்மஸூத்ர ஸித்தாந்தத்தின்படி எம்பெருமான் தன்னிடத்தில் வைஷம்யநைர்க்ருண்ய தோஷங்கள் தட்டாதபடிக்கு அவரவர்கள் செய்துள்ள நல்வினைதீவினைகட்குத் தக்கவாறு பலனளிப்பதில் ஜாகரூகன். இங்ஙனமாயின், சேதநர்கள் பெரும்பாலும் தீவினைகளையே பெருக்கிச் செல்பவராதலால் அவற்றிற்குறிய தண்டனங்களையே எம்

பெருமான் செய்து போரவேண்டியதாம்; அநுக்ரஹம் செய்ய அவகாசம் அரிதேயாம். இந்த நிலைமையை ஆண்டாள் ஸஹித்திருக்கவல்லளல்லள். எம்பெருமானைத் தன்வழிப்படுத்தித் தன் சொல் வழுவாது நடக்கும்படியான உபாயம் தேடுவள். ச்ருங்காரலீலாரஸம் கொண்டாடுகிற அடைவிலே ஒருபுருவநெறிப்புச் செய்த மாத்திரத்திலே அவன் தன் சொல்வழிவருமாறு செய்து விடுவள். அவரவர்களுடைய கருமங்களுக்குத் தக்கபடியே பலனளிக்க வேணு மென்று ஸங்கல்பித்துக்கொண்ட எம்பெருமானுடைய விரதம் தொலைந்ததாகும்—என்றதாயிற்று.

ஸ்ரீவசநபூஷணத்தில் "ஈச்வரனை அழகாலே திருத்தும்" என்ற விடத்து வியாக்கியானத்தில்—"கண்ணைப்புரட்டுதல் கச்சை நெகிழ்த்துதல் செய்து தன்னழகாலே அவனைப் பிச்சேற்றித் தான் சொன்னபடி செய்தல்லது நிற்கமாட்டாதபடிபண்ணி" என்றுள்ள திவ்யஸூக்திகள் இங்கே அநுஸந்தேயங்கள். பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்தில் "உபாயைர் விஸ்மார்ய ஸ்வஜநயஸி" என்றருளிச்செய்த விடத்திலும் உபாயசப்தத்தாலே இவையே விவக்ஷிதம்.

ஆண்டாள் எம்பெருமான் பக்கலில் போக ப்ரவணையாயிருப்பது ஸாபராத சேதந ஸம்ரக்ஷணார்த்தமாகவே யென்பது இந்தச்லோகத்தினால் தெரிவிக்கப்பட்டதாம். முதல்பாதத்தில் குணை: என்பது ஆண்டாளுடைய குணங்களைச் சொல்வதன்று; அவளுடைய ப்ரூக்ஷேபத்தின் குணங்களைச் சொல்லுவது. எம்பெருமானை ஸ்வாதீநப்படுத்திக்கொள்வதற்கு உறுப்பாயிருக்குந் தன்மையே குணசப்தவிவக்ஷிதம். [ஸ்வாதந்த்ர்ய துர்விஷஹமர்மபிதா நிதாநம்] என்று சிலர்க்குப் பாடமாம். அதில் சுவையில்லை யென்க. மர்மமாவது உயிர்நிலை. அதனைப் பேதிப்பதாவது—ஸ்வாதந்திரியத்தை அடியோடே தொலைத்து விடுகை. (25)

ரங்கே தடித்குணவதோ ரமயைவ கோதே க்ருஷ்ணாம்புதஸ்ய கடிதாம் க்ருபயா ஸுவ்ருஷ்ட்யா,
தௌர்கத்யதுர்விஷவிநாசஸுதாநதீம் த்வாம் ஸந்த: ப்ரபத்ய சமயந்த்யசிரேண தாபாந். 26

(அந்) ஹே கோதே! ரங்கே (ஸ்திதஸ்ய) ரமயா ஏவ தடித்குணவத: க்ருஷ்ணாம்புதஸ்ய ஸுவ்ருஷ்ட்யா க்ருபயா கடிதாம் தௌர்கத்ய துர்விஷவிநாசஸுதாநதீம் த்வாம் ஸந்த: ப்ரபத்ய அசிரேண தாபாந் சமயந்தி.

ஆண்டாளே! ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனும் பிராட்டியாகிய மின்னற் கொடியை யுடையவனும் காளமேகம் போன்றவனுமான ஸ்ரீரங்கநாதனுடைய அருள் மழையினாலே உண்டாக்கப்பட்டு, ஸம்ஸாரமாகிற கொடியவிஷத்தைத் தொலைக்கும் விஷயத்தில் அம்ருதநதி போன்றுள்ள உம்மை ஸத்துக்கள் பணிந்து உடனே ஸகல தாபங்களும் தணியப்பெறுகின்றார்கள்.

இந்தச்லோகத்தில் ஆண்டாள் அமுதநதியாக ரூபிக்கப்படுகின்றாள். உலகத்தில் நதியானது மேகத்தினுடைய மழையினாலே ஏற்படுகின்றது; அது அவரவர்களுடைய தாபசாந்தியின் பொருட்டும் ஆகின்றது. இந்த ஆண்டாளாகிற நதியும் ஒரு காளமேகத்தின் மழையினாலேதான் உதித்தது. *கொண்டல் வண்ணனாகக் கூறப்படுகின்ற ஸ்ரீரங்கநாதனே இங்குக் காளமேகம். அவருடைய அருட்பெருக்கே மழையாகக் கொள்ளப்பட்டது. அப்படிப்பட்ட மழையினாலே ஆண்டாள் [ஆகிற நதி] உதித்ததாக அருளிச்செய்வதன்கருத்து யாதெனில், எம்பெருமான் அஸ்மதாதி ஸம்ஸாரி சேதநஸமுஜ்ஜீவநார்த்தமாகப் பரமகருணைகொண்டு, திவ்யப்ரபந்

தங்களை யருளிச் செய்வதற்காக ஆண்டாளை அவதரிப்பித்தருளினனென்கை. நதியானது தன்னிடத்தில் ஆழ்ந்தவர்களை உடனே தாபம் தணிந்தவர்களாக ஆக்கும். ஆண்டாளும் தன்பக்கலிலே ஈடுபட்டவர்களைத் தமது அருளிச்செயல்களாலும் தமது திவ்யமங்கள விக்ரஹாநுபவப்ரதாநத்தாலும் தாபத்ரயமும் தணிந்தவர்களாக ஆக்குகின்றாள் என்றதாயிற்று.

எம்பெருமானை மேகமாகச் சொன்னால், மேகத்தில் மின்னற்கொடி விளங்குமே, அது இங்குமுண்டோவென்று கேள்வியாக, உண்டு என்கிறது முதல்பாதம். வர்ஷிக்கவொருப்பட்ட மேகம் மின்னற்கொடி படரப்பெற்றிருக்குமிறே.

ரமபா என்கிற த்ருதீயைக்கு அபேதம் அர்த்தம்; "தாந்யேந தநவாந்" இத்யாதிகளிற் போல. தடித்குணமாவது—வித்யுல்லதா.

க்ருஷ்ணப்புரஸ்ய என்பதில் ச்லேஷமுள்ளது. க்ருஷ்ணபதம் கருநிறமுள்ள வஸ்துவையும், எம்பெருமானையும் சொல்லும்; ஆகவே கரியமேகத்தினுடைய என்று நதிபக்ஷத்தில் பொருள். எம்பெருமானாகிற மேகத்தினுடைய என்று ஆண்டாள் பக்ஷத்தில் பொருள்.

தௌர்க்கத்யம் என்று ஸம்ஸாரத்தையும் சொல்லும், தாரித்ரியத்தையும் சொல்லும். அதுவாகிற கொடிய நஞ்சு நாசமடைவதற்குக் காரணபூதமான ஸுதாநதி-கோதை.

இங்கு கோதா பதத்தில் கோதாவரிநதியும் த்வனிக்கும். ... (26)

ஜாதாபராதமபி மாமநுகம்ப்ய கோதே கோப்த்ரீ யதி த்வமஸி யுக்தமிதம் பவத்யா:,
வாத்ஸல்ய நிர்ப்பரதயா ஜநநீ குமாரம் ஸ்தந்யேந வர்த்தயதி தஷ்டபயோதராபி. (27)

(அந்) ஹே கோதே! த்வம் ஜாதாபராதம் அபி மாம் அநுகம்ப்ய கோப்த்ரீ அஸி யதி, இதம் பவத்யா: யுக்தம். ஜநநீ (குமாரேண) தஷ்ட பயோதரா ஸத்யபி வாத்ஸல்ய நிர்ப்பரதயா (ஹேதுநா) (தம்) குமாரம் ஸ்தந்யேந வர்த்தயதி (கலு.)

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே! நீர் அபராதியான என்னையும் இரங்கி ரக்ஷித்தருள்வீரேல் இதுவே உமக்குத் தகுதியாகும். (என் குற்றங்களில் நீர் கண் செலுத்தலாகாது. (ஏனென்றால்,) தாயானவள், தன்னுடைய சிசு தனது ஸ்தநத்தைக் கடித்துச் சிறிது துன்பம் விளைத்தாலும் அதைப் பொருள்படுத்தாமல் வாத்ஸல்யமே ஹேதுவாக அக்குழவியை ஸ்தந்யப்ரதாநத்தினால் வளர்க்கின்றாளன்றோ!

## ஆண்டாளுக்கும் ஆசிரியர்க்கும் ஸம்வாதம்

தேசிகன் :—தாயே! என்னை நீர் ரக்ஷித்தருளவேணும்.

ஆண்டாள் :—அபராதியான உம்மை நான் ரக்ஷிக்கில்லேன்.

தேசிகன் :—கோதாய்! நான் அபராதியென்னுமிடம் உண்மையே; ஆனாலும் நீர் கருணைக் கடலாகையாலே என்னைக் காத்தருள்வது உமக்குக் கடமையே யாகும்.

ஆண்டாள் :—நான் கருணைக்கடலென்று உமக்கு யார் தெரிவித்தது?

தேசிகன் :—இதையொருவர் தெரிவிக்கவேணுமோ? நீர் தாயன்றோ; தாய்க்கு உள்ள குணத்தைக் குழந்தை அறியாதோ?

ஆண்டாள் :—தாயாயிருந்தாலும் குற்றஞ்செய்கிற குமாரர்களை அடிப்பதில்லையோ? உலகில் இதுதன்னைக் கண்டிருக்கமாட்டீரோ?

தேசிகன் :—தாயே! நான் சொல்லுவதைக் கேளீர்; குழந்தைகள் தாயின் ஸ்தநந்தைக் கடித்து விடுகின்றன; ஆனாலும் தாய் வாத்ஸல்யாதிக்யத்தினால் முலைப்பால் கொடுத்து வளர்க்கவே காண்கிறோம்; அதற்காக நிக்ரஹிப்பதில்லை; அது போல அடியேனும் உமக்கு அநுக்ராஹ்யனே யல்லது நிக்ராஹ்யனல்லேன் என்றாராயிற்று.

அடியோடு அறிவில்லாத சிசுப்ராயனாக என்னைத் திருவுள்ளம்பற்றிக் குற்றங்களையே பச்சையாகக்கொண்டு காத்தருளவேணுமென்கை இதற்குப் பரமதாத்பர்யம். ... ... ... ... ... ... (17)

சதமகமணிநீலா சாருகல்ஹாரஹஸ்தா ஸ்தநபர
நமிதாங்கீ ஸாந்த்ரவாத்ஸல்யஸிந்து:,
அலகவிநிஹிதாபி: ஸ்ரக்ப்பிராக்ருஷ்டநாதா
விலஸது ஹ்ருதி கோதா விஷ்ணுசித்தாத்மஜா ந:.

ஸ்துதியைத் தலைக்கட்டியருள விரும்பிய ஆசிரியர், ஆண்டாள் எப்போதும் தமது உள்ளத்துள்ளே உறையவேணுமென்று ப்ரார்த்திப்பவராய், அவ்வாண்டாளுடைய தேஹகுணங்களையும் ஆத்மகுணங்களையும் சரித்திரத்தில் முக்கியமான அம்சத்தையும் எடுத்துரைத்து ஸஹ்ருதயஹ்ருதயஹாரியான சைலியாலே வெகு அற்புதமாகப் புகழ்கின்றார். இந்த ஸ்துதியில் மற்ற ச்லோகங்களெல்லாம் ஒருதட்டும் இந்த ச்லோகம் ஒருதட்டுமாயிருக்குமென்று ரஸிகர்கள் ஈடுபடுவர்கள்.

[சதமகமணிநீலா] இந்திரநீலக்கல்போலே நீலநிறங்கொண்டு விளங்குமவள். [சாருகல்ஹாரஹஸ்தா] அழகிய செங்கழுநீர் மலரைத் திருக்கையில் ஏந்தியுள்ளவள். இந்த விசேஷணம் அர்ச்சாவதாராநுபவத்தை விளக்கும். (ஸ்தநபரநமிதாங்கீ) "வனிடைவாழிசங்குத்தமர்க்கென்று உன்னித்தெழுந்த வென்தடமுலைகள்" என்றும், "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னாவி தங்கும்" என்றும், "கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர்! கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா" என்றும், "கொம்மைமுலைகளிடர் தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல், இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?" என்றும் (நாச்சியார் திருமொழியில்) அருளிச்செய்தபடியே பகவத் விஷயத்தில் ஈடுபட்ட அவயவவிசேஷத்தை யுடையவளென்கை. பக்திபாரத்தைச் சொல்லுகை உள்ளுறை.

[ஸாந்த்ரவாத்ஸல்யஸிந்து:] நம்போல்வாரான பேதையர்கள் பக்கலிலே வாத்ஸல்யமே வடிவெடுத்தவளென்கை. [அலகவிநிஹிதாபி: இத்யாதி.] "ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே" என்று பட்டரருளிச்செய்ததைத் திருவுள்ளம்பற்றி இந்த விசேஷணமிடுகிறாராயிற்று. சூடிக்களைந்த மலர்மாலைகளினால் எம்பெருமானை உகப்பித்து, அவனைத் தன்சொல்வழி வருமாறு செய்துகொண்டவளென்றபடி.

ஆக இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த பெரியாழ்வார்திருமகளான ஆண்டாள் எப்போதும் என்னுள்ளத்துள்ளே உறையவேணு மென்முராயிற்று.

ஆண்டாள் *நல்ல வென்தோழி! என்கிற பாட்டிலே "வில்லி புதுவை விட்டு சித்தர் தங்கள் தேவரை, வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" என்று பெரியாழ்வார் திருமகளாகத் தாம் வளரப்பெற்றது தன்னையே தனக்கு நிதியாகக் கொண்டிருந்ததனுல் இவ்வாசார்ய சிகாமணி இந்த ஸ்துதியில் "ஸ்ரீ விஷ்ணு சித்தகுல நந்தந கர்பவல்லீம்" என்று உபக்ரமித்து "விஷ்ணுசித்தாத்மஜா" என்று தலைக்கட்டியருளினர்.

{ இதி விகஸிதபக்தேருத்திதாம் வேங்கடேசாத் பஹுகுண ரமணீயாம வக்தி கோதாஸ்துதிம் ய:,
ஸ பவதி பஹுமாந்ய: ஸ்ரீமதோ ரங்கபர்த்து: சரண கமலஸேவாம் சாச்வதீமப்யுபைஷ்யந். (29) }

(அந்) விகஸிதபக்தே: வேங்கடேசாத் இதி உத்திதாம் பஹுகுணரமணீயாம் கோதாஸ்துதிம் ய:வக்தி, ஸ: ஸ்ரீமத: ரங்கபர்த்து: சாச்வதீம் சரணகமலஸேவாம் அப்யுபைஷ்யந் ஸந் பஹுமாந்ய: பவதி.

பக்திவிகாஸ முடையவரான ஸ்ரீவேங்கடநாதார்யர் பக்கல் நின்றும் இவ்விதமாக அவதரித்த, சப்தாலங்கார அர்த்தாலங்கார புஷ்டியோடு கூடிய கோதாஸ்துதியை யாவனொருவன் கற்கின்முனே, அவன் நித்யகைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெறுவானுய் அழகிய மணவாளனுக்கு பஹுமாநபாத்ர பூதனுவான்.

நிகமத்தில் பலனுரைத்துத் தலைக்கட்டுகிருர். கோதாஸ்துதி யென்று ஒரு க்ரந்தமியற்றவேணுமென்று நானே முயற்சிகொண்டு ப்ரவர்த்தித்தேனல்லன்; பக்தி பலாத்காரத்தாலே இங்ஙனே ஒரு ஸ்துதி ஸகலகுணஸம்பந்நமாய் ஸ்வயமேவ ஆவிர்ப் பூதமாயிற்றென்கிருர் முன்னடிகளில்.

இப்படிப்பட்ட இந்த ஸ்துதியை ஓதுமவர்கள் காலாந்தரத்தில் (அதாவது ஏதத் தேஹாவஸாநத்தில்) நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யகைங்கர்ய ஸாம்ராஜ்யம் பெறுவர்கள்; இந்த விபூதியில் வாழ்ந்திருக்குமளவும் தென் திருவரங்கம் கோயில் கொண்ட திருமாலருளுக்குக் கொள்கலமாய் இனிது வாழ்வர் என்று பலனுரைத்துத் தலைக்கட்டினுராயிற்று. ... ... ... (29)

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர்

இயற்றிய

# கோதாஸ்துதி வியாக்கியானம்

முற்றிற்று.